SUPPLEMENT TO "THE PEOPLE'S FRIEND."

"ஜநபிமானி"க்கு அனுபந்தம்.



PRESIDENT POINCARE OF FRANCE.

ப்ரான்ஸின் ப்ரெஸிடெண்டாகிய மா. ப்வான்காரெ.



THE MIKADO OF JAPAN.

ஜப்பான் சக்ரவர்த்தி.



KING PETER OF SERVIA.
ஸெர்வியாவின் அரசராகிய பீட்டர்.



MR. WINSTON CHURCHILL.
**First Lord of the Admiralty, England,**
மிஸ்டர் வின்ஸ்டன் சர்ச்சில்
இங்க்லண்டின் கப்பல்படை மந்த்ரி.



DR. VON BETHMANN-HOLLWEG
The German Imperial Chancellor.
டாக்டர் வான் பெட்மன்-ஹால்வெக்
ஜெர்மனியின் ப்ரதம மந்த்ரி.



M. RENE VIVIANI
The French Prime Minister.
மா. ரெனெ விவியானி
ப்ரான்ஸின் ப்ரதம மந்த்ரி.



**M. SAZONOFF**
The Russian Foreign Minister.

மா. ஸாஸனுப்
ரஷ்யாவின் அன்ய தேச வ்யவஹார மந்த்ரி.



**HERR VON JAGOW**
The German Foreign Secretary.

ஹெர் வான் யாகௌ
ஜெர்மனியின் அன்ய தேச வ்யவஹார மந்த்ரி.

# ஜனபிமானி.

(முன்பு 'பிழைக்கும் வழி' யென்று வழங்கியது.)

## THE PEOPLE'S FRIEND

FORMERLY KNOWN AS THE 'PRACTICAL LIFE'

ஜி. எ. வைத்யராமன், பி. எ., பத்ராதிபர்.

G. A. VaidyaRaman, B.A., EDITOR.

புஸ்தகம் 7 Vol. 7. — ஆனந்தஸூ கார்த்திகைமீ, NOVEMBER 1914. — ஸஞ்சிகை 3. No. 3.


## The People's Friend.

An illustrated Tamil monthly devoted to public welfare and popular education.

The 'People's Friend' is subscribed for by Government for use in the agricultural stations and by several Local Boards and Municipalities for the use of the teachers and pupils in the schools under their control.

RATES OF SUBSCRIPTION POST FREE.

| | Inland. Rs. A. P. | | Foreign. Rs. A. P. |
|---|---|---|---|
| Per annum ... | 4 0 0 | ... ... | 6 0 0 |
| Single copy ... | 0 6 0 | ... ... | 0 8 0 |
| Sample copy ... | 0 6 0 | ... ... | 0 8 0 |

RATES OF ADVERTISEMENT.

| | | | |
|---|---|---|---|
| 1 Page | ... | 5 0 0 | per month. |
| ½ do | ... | 2 8 0 | do |
| ¼ do | ... | 1 4 0 | do |
| $\frac{1}{10}$ do | ... | 1 0 0 | do |

The above rates are all *net* and subject to no discount whatever. Orders should be accompanied with advance.

**Notice to Contributors**:—The Editor solicits contributions on subjects relating specially to agriculture, trade, industry and popular, scientific and technical education. Articles should be written in plain colloquial Tamil on one side of the paper only and on half margin. Accepted articles will be paid for on publication. It will be understood that the publishers may at their discretion republish in book form articles which have been paid for at the time of publication in the journal.

No money should be paid to any Agent. All remittances and letters should be addressed to the Publishers, Messrs. G. A. VaidyaRaman & Co., 3 & 4, Sunkurama Chetty Street, Georgetown, Madras.

## ஜனபிமானி.

பொது ஜனங்களின் அறிவைப் பரவச்செய்து அவர்களுடைய க்ஷேமத்துக்காக உழைத்துவரும் ஒரு மாஸாந்தத் தமிழ்ப்பத்ரிகை.

விவஸாயப் பண்ணைகளின் உபயோகத்துக்காக கவர்ன்மெண்டாரும், ஸ்கூல்களில் உபாத்யாயர்கள், மாணுக்கர்கள் இவர்களுடைய உபயோகத்துக்காக பல லோகல் போர்டுகளும் முனிஸிபாலிட்டிகளும் 'ஜனபிமானி'யை வாங்கிவருகிறார்கள்.

தபால் சார்ஜ் உள்பட சந்தா விவரம்.

| | உள் நாடு. | | அந்ய நாடு. |
|---|---|---|---|
| வர்ஷம் 1 க்கு | ... 4 0 0 | ... | 6 0 0 |
| தனிப்ரதி | ... 0 6 0 | ... | 0 8 0 |
| மாதிரி காபி | ... 0 6 0 | ... | 0 8 0 |

சந்தாப்பணத்தை ஒரு ஏஜெண்டினிடத்திலும் கொடுக்கக்கூடாது. ஸகல பணத்தையும் எங்களுக்கு நேரில் அனுப்பிவிடவேண்டும்.

விளம்பர விகிதங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1 பக்கத்திற்கு | மாஸம் ஒன்றுக்கு | | 5 0 0 |
| ½ பக்கத்திற்கு | ,, | ,, | 2 8 0 |
| ¼ பக்கத்திற்கு | ,, | ,, | 1 4 0 |
| $\frac{1}{10}$ பக்கத்திற்கு | , | ,, | 1 0 0 |

வ்யாஸம்எழுதுகிறவர்கள்கவனிக்கவேண்டியவை

விவஸாயம், வ்யாபாரம், கைத்தொழில் விஷயங்களைப்பற்றி வ்யாஸங்கள் தேவை. அவைகள் ஒப்புக்கொள்ளப்பட்டால் ப்ரசுரமானதும், எழுதினவர்களுக்கு தக்க ஸம்பாவனைசெய்யப்படும். ஒவ்வொரு வ்யாஸத்தையும் கடுதாசியின் ஒரேபக்கத்தில் ஒருபாதியை விட்டு மறுபாதியில் மட்டும் எழுதவேண்டும். பேசும் தமிழ்தான் தேவை. கடினமான தமிழ் உதவாது.

ஸம்பாவனை செய்திருக்கும் வ்யாஸங்களை நாங்கள் எங்கள் இஷ்டப்படி எந்த விதம் வேணுமானுலும் மறுபடி ப்ரசுரிக்க அதிகாரமுண்டு என்பதை கிருபநேயர்கள் அறியவேணும்.

ஜி. எ. வைத்யராமன் அண்ட் கம்பெனி.,
3 & 4, சங்குராம செட்டித் தெரு, ஜார்ஜ் டவுன், மதராஸ்,




ஜநபிமானி.

புஸ்தகம் 7.] ஆனந்தஸூ கார்த்திகைமீ. [ஸஞ்சிகை 3.

# THE POST-PUBERTY MARRIAGE BILL.

BY The Hon. Mr. V. S. SRINIVASA SASTRI, B.A.

## ருதுமதி விவாஹ மசோதா.

இந்த மாஸம் நடந்த சென்னைச் சட்ட ஸபையில் ருதுமதி விவாஹ மசோதா என்று ஓர் மசோதா கொண்டுவர அனுமதி கொடுக்கப்பட்டது. ப்ராமணர்களுக்குள்ளும் அவர்களை அநுஸரித்து வரும் வேறு சில ஹிந்து வகுப்பினர்களுக்குள்ளும் பெண்களை ருதுவான பிறகு விவாஹம் செய்து கொடுத்தாலும், அந்த விவாஹம் சட்டப்ரகாரம் செல்லவேண்டுமென்பது மசோதாவின் கருத்து. இப்பொழுது இந்த வழக்கம் இல்லாததாலும், சில ஸ்ம்ருதிகள் ருதுமதி விவாஹம் கூடாதென்று தடுத்திருப்பதாலும், அது செல்லுமோ என்கிற ஸந்தேகம் இருக்கிறது. சிலர் கட்டாயம் செல்லுமென்று திடமாய் சொல்லுகிறார்கள். பம்பாய், பஞ்சாப் முதலிய இடங்களில் அநேகர் துணிந்து பெண்களை வயதானபிறகு மணஞ் செய்துகொடுக்கிறார்கள். சட்டத்திற்கு ஏற்றதா என்ற பயமே அவ்விடத்தில் தோன்றவில்லை போலும். நம்முடைய ராஜதானியில் மட்டும் இந்த புது ஆசாரம் ஏற்படவேண்டுமென்று வெகுகாலமாய் ப்ரயத்னம் செய்தும், இதுவரை ஆந்த்ரநாட்டில் மட்டுந்தான் ஏதோ இரண்டு மூன்று விவாஹங்கள் நடந்திருக்கின்றன. தமிழ் நாட்டிலோ வர்ஷந்தோறும் சில பெண்களுக்கு இந்த எல்லை தாண்டியே விவாஹம் நடக்கிறதென்பது எல்லோருக்கும் தெரிந்திருந்தாலும், அதை வெளியில் ஒப்புக்கொள்ளாமல் உண்மையை மறைத்து கார்யம் நடைபெறுகிறது. இப்படி பயந்து பொய் சொல்லி ஆசார வழுவுதல் செய்யாமல், ப்ரஸித்தமாய் பெரிதான பெண்ணென்றே கல்யாணம் செய்தால் என்ன? இதை ஜாதியார் ஒப்பமாட்டார்கள்; தகுந்த மாப்பிள்ளை கிடைக்க மாட்டான்; கிடைத்தாலும் சுற்றத்தார் கல்யாணம் செய்து கொடுப்பவர்களையும் செய்பவர்களையும் தள்ளி வைப்பார்கள், இவ்வித உபத்ரவம் போதாது போல கோர்ட்டில் விவஹாரம் நேர்ந்தால் கல்யாணம் செல்லாதென்றும், பிறந்த குழந்தைகளுக்கு ஒழுங்காய்ப் பிறந்த குழந்தைகளுக்குள்ள பாத்யதைகள் கிடையாவென்றும் பயம் உண்டாயிருக்கிறது. சட்ட ஸபையார், இந்த பயத்தைமட்டும் மேற்சொன்ன மசோதாவை அங்கிகரித்து போக்கடிக்கலாம். அப்படி போக்கடித்தலும் வேண்டும். ஜாதிக்கட்டு, சுற்றத்தார் விரோதம் முதலிய கேடுகளை மாற்ற ஒருவராலும் முடியாது. இவைகளை புது ஆசாரத்தை நிலைநாட்ட வேண்டுமென்று உத்ஸாகம் கொண்டவர்கள் அநுபவித்தே தீரவேண்டும். நம்முள் சிலர் ஆராய்ந்து பார்க்காமல் "அவரவருக்கு தோன்றினபடி செய்யலாமே, யார் அடிக்கிறார்கள்." என்று சொல்வதுண்டு. ஆனால் வேறு சிலர் கட்டுப்பாடுகள் செய்து பழைய வழி போகாதவர்களை ஹிம்ஸிப்பது உண்டு. சட்டத்தில் ஸந்தேகம் உண்டு; அதை தீர்ப்பது அவச்யம்தான் என்று அநேக ந்யாயவாதிகள் அபிப்ராயப்படுகிறார்கள். இவர்களுள் முக்யமாய் இப்பொழுது நம் ஹைக்கோர்ட்டில் ஹிந்து ஜட்ஜிகளாய் விளங்கி வரும் ஸர் சங்கரன் நாயர், திவான் பஹதூர் ஸதாசிவய்யர், மிஸ்டர் சேஷகிரி அய்யர், மிஸ்டர் குமாரசாமி சாஸ்த்ரி ஆகிய இவர்களைச் சொல்லலாம். காலஞ்சென்ற ஜஸ்டிஸ் ஸர். டி. முத்துஸாமி அய்யர் ஒரு தீர்ப்

பில் ஹிந்து சாஸ்த்ரம், ஹிந்து வழக்கம் இவைகள் ப்ரகாரம் ப்ராமணப் பெண்களுக்கு பெரியவளாவதற்கு முன்னமேயே கல்யாணம் செய்துவிட வேண்டுமென்று எழுதியிருக்கிறார். ஆகையால் மற்ற மாகாணங்களில் எப்படியிருந்தால் என்ன, இந்த மாகாணத்தில் இம்மாதிரி ஒரு சட்டம் வேண்டுமென்பது நிச்சயம்.

வேறு சில சட்டங்கள் போல இந்த சட்டத்தால் ஒருவருக்கும் நிர்ப்பந்தமில்லை. எல்லாரும் ருதுமதி விவாஹம் செய்யவேண்டுமென்றுவது, செய்தவர்களுடன் • வழக்கம்போல ஒன்றுகூடி வாழவேண்டுமென்றுவது கட்டாயம் கிடையாது. யாராகிலும் துணிந்து ருதுமதி விவாஹம் செய்தால் அவ்விவாஹத்தை கோர்ட்டார் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று மட்டும் மசோதாவில் கண்டிருக்கிறது. ஆகையால் நம்முடைய விவாஹமுறை தவறிவிடும், ஸனாதன தர்மம் அழிந்துபோகும், ஹிந்துக்கள் என்ற பெருமை நசித்துவிடும், என்றெல்லாம் அஞ்சுவது அறிவீனம். புது ஆசாரத்தைக் கைக்கொள்பவர்கள் அநேகர் இருக்கமாட்டார்கள். இது நிலைபெற அநேக தலைமுறையாகும். ஏதோ சிலருக்குமட்டும் விவாஹ விஷயத்தில் இஷ்டப்படி செய்ய ஸ்வாதீனம் உண்டாகும்.

இப்படி ஏதோ சிலர் நன்மைக்காக மட்டும் ஒரு சட்டம் செய்வானேன்? ருதுமதி விவாஹம் நாகரிகமுள்ள மற்ற நாடுகளிலும் இந்நாட்டில் ப்ராமணர்கள் தவிர மற்ற ஜாதிகளுக்குள்ளும் பெரும்பாலும் அனுஷ்டானத்திலிருக்கிறது. நாம் மட்டும் அறியாக் குழந்தைகளை விவாஹம் செய்து அநேகரை கைம்பெண்களாக்குகிறோம். படிப்பும் வெகுவாய் இல்லை. இருந்தால் அடித்தரப்படிப்புக்கு மேல் ஏறுகிறதில்லை. தம்மையே ஸம்ரக்ஷிக்கத் தகுந்த அறிவில்லாத சிறு பெண்கள் குழந்தைகளை பெற்று வளர்த்து ஆளாக்கும்படி நேருகிறது. இதனால் ப்ராமண ஜாதியாருக்கே ஆயுள் குன்றியும் தேகபலம் மனோ தைர்யம் முதலியவை குறைந்தும் வருகின்றன. ஆண் பெண்கள் கூடி வாழ்ந்து குடும்ப நிர்வாகம் செய்யும் அவஸரம் நேரிடும் வரையில் கல்யாணம் செய்வானேன்? மற்ற ஜாதிப்பெண்கள் 15, 16 பிராயம் வரையில் ஆண் பெண் என்ற வ்யவஹாரமே தெரியாமல் தேகப் பயிற்சி மனப்பயிற்சி இரண்டையும் பெற்றுவர, நம் பெண்கள் மட்டும், 7, 8 வயஸுமுதல் வேறு குலங்களில் புகுந்து அகமுடையான், மாமியார், நாத்தனர் என்கிற நிர்ப்பந்தங்களுக்குட்பட்டு பிஞ்சில் பழுத்துதேய்ந்து போவானேன்? சிலர் கல்யாணத்தை அதிபால்யத்தில் செய்துகொண்டு சாந்தி முகூர்த்தத்தை ஒத்திப் போட்டால் போதாதா என்பார்கள். இதற்கும் சில ஆக்ஷேபணைகள் சொல்லலாம். முதலாவது, இந்த யுக்தியால் வைதவ்ய தசை குறையாது. இரண்டாவது, பெண்களுக்கு அதிசீக்ரத்தில் புத்திமாறி தேகம் தகுந்தபடி திடப்படுவதற்கு முன்னர் ருதுவாய் விடுகிறார்கள்.

ஒரு புது ஆசாரம் எவ்வளவு யுக்திக்கு ஒத்திருந்தாலும், ஹிந்து தர்ம சாஸ்த்ரத்திற்கு விரோதமாயிருந்தால் அதை நாம் கைக்கொள்ளலாகாது என்று ஒருதரத்தார் சொல்லுவார். ருதுமதி விவாஹம் அவ்விதமல்ல. இது சாஸ்த்ர ஸம்மதிபெற்று முற்காலத்தில் நம் தேசத்தில் பெரும்பாலும் வழங்கியது. காவ்ய நாடகங்களிலும், ராமாயணம், பாரதம், மற்றுமுள்ள புராணங்களிலும் சரித்ரங்களிலும் யௌவனம் வந்து காமம் ஜனித்த பிறகே அநேக பெண்களுக்கு விவாஹம் ஆனதாக வெளியாகிறது. ஸ்வயம்வரமென்று பெண் தானே பார்த்து புருஷனை தெரிந்தெடுப்பதாக ஓர் ஸம்ப்ரதாயமுண்டு. இது க்ஷத்ரியப்பெண்களுக்கு மட்டும் அல்ல; ஆரியர் என்று சொல்

லும் ப்ராமணர், க்ஷத்ரியர், வைச்யர் என்ற மூன்று வர்ணத்தார்களுக்குமுண்டு. பெரும்பா லும் விவாகச் சடங்குகளும் மந்த்ரங்களும் பொதுவானவை. மந்த்ரங்களின் பொருளை ஆராய்ந்தால் விவாஹ காலத்தில் பெண், பிள்ளை இருவருமே முதிர்ந்த பிராயமுள்ளவர் களாயிருக்கவேண்டு மென்று ஸந்தேகமில்லா மல் தெரியவருகிறது. அநேக ஸ்ம்ருதிகளில் ருதுவான பிறகு 3 வர்ஷம் வரை தகப்பனர் விவாஹம் செய்துகொடுக்கலாமென்றும், அதற் குப் பிறகு பெண்கள் ஸ்வயம்வரம் செய்து கொள்ளலா மென்றும் விதித்திருக்கிறது. இந்த 3 வர்ஷ காலத்துக்குள் செய்யும் விவா ஹம் இரண்டாம் பக்ஷம் என்று அநேகர் அபி ப்ராயப்படுகிறார்கள். இருக்கட்டுமே. ச்ராத் தங்களிலாகிலும், புண்ய காலங்களிலாகிலும் யாகாதி க்ருதுக்களிலாகிலும் மற்றுமுள்ள சுபாசுபக் கார்யங்களிலாகிலும் எதில் தான் முதல்தரமாக நாம் நடத்துகிறோம்? இந்தப் புண்ய பூமியில் ச்ரத்தை குறைந்து வைதீகம் அழிந்து வர்ணாச்ரமதர்மங்கள் ஒன்றாகிலும் சரி யாய் நடக்கவில்லை யென்பது நிராக்ஷேபம். பெண் விவாஹத்தில் மட்டும் ஸௌகர்யத்தை யும் நாநாவித க்ஷேமங்களையும் உத்தேசித்து சாஸ்த்ர ஸம்மதமான ஒரு வழியைப் பற்றினால் அது இரண்டாம் பக்ஷம் என்று சொல்லுவது தகுமோ? நம் பெரியோர்கள் ஏற்படுத்திய ப்ராம்ம விவாஹம் என்ற உத்தமமான கல் யாண முறை பெண் பெரியவளாகாமலிருந் தால் மட்டும் காப்பாற்றப்படுமோ? அக்ஷரம், ஸ்வரம், அர்த்தம் ஆகிய மூன்றும் பொருந்தா மல் ஸமயா ஸமயம் அறியாமல் மந்த்ரங்களை ப்ரயோகித்து கார்ய கௌரவத்தை மனதில் சிறிதேனும் நினையாமல் எதிர் ஜாமீன், சீர், சாப் பாடு, பலதானம் முதலிய விஷயங்களில் மன தை முழுவதும் செலுத்தி பாட்டும் கூத்தும் சண்டையும் சச்சரவுமாக கல்யாணத்தை நடத்துவது முதற் பக்ஷமாகுமோ? வர தக்ஷிணை, மந்த்ரம் சொல்லுதல் முதலிய முக்ய கார்யங்களில் சாஸ்த்ரத்தை ஒரு பக்கத்தில் தள்ளி, மூன்றும் பக்ஷம், நான்காம் பக்ஷமான வழக்கங்களைக் கைகொண்ட நாமோ சாஸ்த் ரம் ஒப்புக்கொண்ட ருது மதி விவாஹத்தை இரண்டாம் பக்ஷமென்று ஒதுக்கவல்லவர்!

இது தவிர மற்றொரு முகாந்திரமுண்டு. கல்யாணச் சடங்கையெல்லாம் க்ரமமாய் மந்த் ரங்களுடன் கண்டிருக்கும் பழைய க்ருஹ்ய ஸூத்ரங்கள் என்று சொல்லப்படும் புஸ்தகங் களில் முதல் 3-நாள் இரவில் தம்பதிகள் புண ராமல் சேர்ந்து படுத்திருந்து, நான்காவது நாள் ராத்ரியில் 12-மணிக்குமேல் ஸம்போகம் செய்வதைப் பற்றி மிகப் பச்சையாய் வர்ணிக் கும் சில மந்த்ரங்களை சொல்லிப் புணரவேண்டு மென்று கட்டளை தெளிவாய் இருக்கிறது. இதனால் முற்காலத்தில் ருதுமதியான பெண் களுக்குத்தான் விவாகமென்பது நன்கு விளங் கும். தற்காலக் குழந்தை விவாகங்களிலோ சடங்கையெல்லாம் விட்டு மந்த்ரங்களை மட் டும் தாறுமாறாய்ச் சொல்லி உண்மையை மறைக் கடித்து ஸாகஸத்துடன் இப்படித் தான் அனாதியாய் நடந்து வருகிறதென்று ஓங்கி ஸாதிக்கிறார்கள். ஆனால் பழைய ஸம்ப்ரதாயம் இன்னவை யென்று ஞாபகப்படுத்துவதற்கு ஒரு வழக்கம் மைஸூரில் மண்டையத்தார் என்று சொல்லப்படும் வகுப்பினரிலும், மாத் யந்தினர் என்கிற சுக்லயஜுர் வேதிகளிலும் இருக்கிறது. அதாவது, விவாஹத்தின் நான்காம் இரவில் வதூவரர்களை க்ஷணகாலம் சேர்த்துப் படுக்கவைத்து ஒரு கம்பளத்தால் போர்வை யிட்டு எடுத்துவிடுகிறது. இதில் புருஷர்கள் அதிகமாய்க் கலக்காமல் பெண்டுகள் ஸம்ப்ர தாயம் என்று நடத்திவிடுகிறார்கள்.

மேற்சொன்ன நன்மைகள் விளைந்தாலும், சாஸ்த்ர ஸம்மதி இருந்தாலும், புது வழக்கம் ஒன்றை கைப்பற்றும்பொழுது ஜனங்களுக்கு

ஏதாகிலும் பயம் தோன்றுவது ஆச்சர்யமல்ல. இவ்விஷயத்தில் சிலர் பின்வாங்குவதற்கு சொல்லத்தகாத ஒரு காரணத்தைச்சொல்லுகிறார்கள். ருதுவான பிறகு பெண்களுக்கு விவாஹம் செய்யலாமென்றால் பெண்பாலை தூற்றுவது தோஷமில்லை யென்று எண்ணங்கொண்ட ப்ராமண ஜாதியில் சில பெண்களுக்கு கெட்ட பெயர் வைத்து விடுவார்களே, ஏதோ சில பெண்கள் உண்மையில் கெட்டும்போகலாமே என்கிறார்கள். இதற்கு ஆதாரமாக பெண்பாலருக்கு கபடமும் காமமுமே பெரிது என்பதற்கு புராண வசனங்களும் கதைகளும் ஆதாரமாக எடுத்துரைக்கப்படும். ஆனால் இது முற்றிலும் அநீதி. வாய், கை ஒன்றுமில்லாமல் நம்மையே அடைக்கலமாகப் புகுந்த நம் ஸகோதரிகளையும் பெண்களையும் இவ்வாறு ஸந்தேகிப்பது தகாது. ருதுமதி விவாஹம் வழங்கிவரும் மிக நாகரிகமடைந்த அநேக ஜாதிகளில் பெண்களுக்கு கற்புக் குறைவு என்று நினைப்பது அறிவீனம். இதுவரை காப்பாற்றி வந்த பெண்களை ருதுமதி விவாஹமென்பது உண்டாகிவிட்டால் காப்பாற்ற முடியாதோ? நம்மில் அநேகருக்கு ஹிந்து ஸ்த்ரீகள் மேல் நாட்டு ஸ்த்ரீகளைக் காட்டிலும் ரொம்ப கற்புள்ளவர்கள் என்று பெருமை யுண்டு. இந்த உயர்வு உண்மையானால் எதனால் வந்தது? நம் ஸ்த்ரீகளின் இயற்கையாலா? அல்லது பால்யத்தில் விவாஹத்தை செய்து முடித்தல் என்கிற வழக்கத்தாலா? இரண்டாம் பக்ஷத்தை ஏற்றுக்கொள்வது மிகவும் இழிவு.

வேறு சிலர் வெகு தூரத்ருஷ்டியோடு மற்றொரு கேடு வருமென்று பயப்படுகிறார்கள். வயதான பிறகு கல்யாணமென்றால் சில பெண்களுக்கு ரூபத்தாலோ துர்க்குணத்தாலோ வேறு பிடிவாதத்தாலோ கல்யாணமே ஆகாமல் நின்றுவிடக் கூடும். அப்படி கன்னிகைகளாகவே இருக்கும் பெண்களுக்கு ஜீவனத்துக்கு வழியென்ன? குடும்பச்செல்வத்தில் ஒரு பாகம் கொடுக்கும்படி வருமே. அதற்கு ஒருவாறு சட்டத்தைத் திருத்தவேண்டும். இது தவிர, நாட்டில் மணம்புரியாத பெண்கள் அநேகரிருப்பதே கற்புக்குக் குறைவாகும். விவாஹ முறை தப்பிப் பிறந்த குழந்தைகளின் கணக்கு அதிகமாகும். பெண்களும் எனக்கு இந்தப்பிள்ளை வேண்டாம், அந்தப் பிள்ளை வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கத் தலைப்படுவார்கள். இவையெல்லாம் ஒரு மாதிரியில்லாட்டால் வேறொரு மாதிரியாக இப்பொழுதும் உண்டு. புதிதாய் உண்டாகப்போகிறதில்லை. அதிகமாயும் வளரப்போகிறதில்லை. வீணாய் சஞ்சலப்படலாகாது. ருதுமதி விவாஹம் உலகத்தில் எங்கும் வழங்கிவருகிறது. நம் ஊரிலும் ஆதிகாலத்தில் வழங்கியதுதான். நம்முடைய மதத்திற்கும், ஆசாரத்திற்கும் ஏற்றதுதான். நம் ஜாதியார் நாகரிகம் பெற்ற மற்ற ஜாதியார்போல் முன் வந்து பெருமை பெறவேண்டுமானால், ஸ்த்ரீ ஜாதியின் நிலையை உயர்த்துவதே முதற் கார்யம். ஸ்த்ரீ ஜாதியின் நிலையை உயர்த்துவதற்கு ருதுமதி விவாஹம் இன்றியமையாததென்று சொல்லவும் வேண்டுமோ?

முடிவில் ஒரு ப்ரார்த்தனை. இவ்வளவு கக்ஷி, ப்ரதிகக்ஷிப் பேசுவதால் மசோதாவின் கருத்து ஏதோ அடியோடு நம் நிலையை கவிழ்த்து விடுவதென்று தோன்றலாம். அது சரியல்ல. முதலில் சொல்லியவாறு யாராகிலும் பதினாயிரத்தில் ஒருவர் துணிந்து தேசக்ஷேமமென்றோ, ஜாதி மேன்மையென்றோ, பெண் கல்வி யென்றோ இந்தப் புதிய வழக்கத்தை அனுஷ்டித்தால் தம்பதிகளுக்கும், அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கும் குற்றம் குறைவு ஒன்றும் நேரிடலாகாதென்பது மட்டுமே இந்த மசோதாவின் முக்யக் கருத்து. ருதுமதி விவாஹம் சென்னை ப்ராமணருள் வேரூன்றுமென்பதே பெரிய ஸந்தேகத்திலிருக்க, அது நாடெங்கும் பரவினால் என்ன தீமை விளைவிக்குமோ என்று யோசிப்பது சற்றேனும் அவச்யமில்லை.

வி. எஸ். ஸ்ரீனிவாஸன்.

# SOME RULERS AT WAR.

## சில யுத்தம் செய்யும் தேசாதிபதிகள்.

### PRESIDENT POINCARE OF FRANCE.

ப்ரான்ஸின் ப்ரேஸிடெண்டாகிய
மா. ப்வான்காரே.

ப்ரெஞ்ச் குடியரசின் ப்ரெஸிடெண்டாகிய மாஸ்யே ரேமண்ட் ப்வான்காரெ 1860-ம் வர்ஷம் ஆகஸ்ட்மாஸம் 20-தேதி ஜனனமானர். ஆகவே இவருக்கு இப்போது 55-வது வயஸு நடந்துகொண்டிருக்கிறது. இவருக்குதேசாபிமானம் ரொம்ப அதிகம். ரொம்ப மன உறுதியும், ஆழ்ந்த யோசனையும், விடாமுயற்சியும், விஷயங்களைநன்கு கவனித்து அறியும் சக்தியும் உள்ளவர். சாஸ்த்ரம், இலக்கியம், தத்வ சாஸ்த்ரம் முதலியவைகளில் விசேஷ ஞானம் உண்டு. இவருக்கு வெகு சீக்ரமாக பேரும் புகழும் ஏற்பட்டு விட்டது. 27-வயஸு ஆகு முன்னமேயே இவர் சேம்பர் அப் டெபுடீஸ் என்னும் பார்லிமெண்ட்போன்ற ராஜாங்க ஸபைக்கு டெபுடியாகத் தெரிந்தெடுக்கப்பட்டார். இவர் முதலில் சிலகாலம் பத்ராசிரியராக இருந்து, பிறகு வக்கீலாக வேலைபார்த்து வந்தார். அவர் சேம்பர் அப் டெபுடீஸ் ஸபையில் சேர்ந்தவுடன் சீக்ரமே தமது புத்தி வல்லமையால் தாம் இப்படிப்பட்டவரென்பதை காட்டிவிட்டார். இவர் 1893-ம் வர்ஷத்தில் அதாவது 33-வது வயஸிலேயே கல்வியிலாகா மந்த்ரியாக நியமிக்கப்பட்டார். பிறகு வரவு செலவு மந்த்ரியாகவும், மறுபடி வித்யா மந்த்ரியாகவும் இருந்து வந்தார்.

1895-ம் வர்ஷத்தில் அவர் மந்த்ரி ஸ்தானத்தை விட்டுவிட்டு, மறுபடியும் வக்கீல் உத்யோகத்தில் அமர்ந்து செல்வமும் கீர்த்தியும் அடைந்து வந்தார். அப்போதும் ப்ரெஞ்ச் பார்லிமெண்ட் ஸபையை விடாமல் அதில் மெம்பராக இருந்து ராஜாங்க விஷயங்களைப் பற்றி கவனித்துக்கொண்டு வந்தார். மறுபடியும் 1904-ம் வர்ஷத்திலும், 1906-ம் வர்ஷத்திலும் வரவு செலவு மந்த்ரியாகவிருந்து, பிறகு பொதுக்கார்யங்களிருந்து விலகிக் கொண்டார். 1912-ம் வர்ஷத்தில் மறுபடியும் ராஜாங்கத்தில் சேர்ந்துகொண்டு ப்ரதம மந்த்ரியாக இருந்து வந்தார். சென்ற 1913-ம் வர்ஷம் ஜனவரி மாஸத்தில் ப்ரெஸிடெண்டாகத்தெரிந்தெடுக்கப்பட்டார்.

இவர் ஸர் எட்வர்ட் க்ரேயைப்போல் அன்ய தேச வ்யவஹாரங்களில் மிகவும் ஸாமர்த்ய சாலி. ப்ரான்ஸுக்கு ரஷ்யாவின் கூட்டுறவு அவச்யம் வேண்டுமென்பது அவருடைய அபிப்ராயம்.

### KING ALBERT OF BELGIUM.

ஆல்பர்ட், பெல்ஜியத்தின் அரசர்.

பெல்ஜியத்தின் அரசராகிய ஆல்பர்ட் 1875-ம் வர்ஷம் பிறந்தார். இவர் இவருக்கு முன் பெல்ஜியத்தின் அரசராக இருந்த இரண்டாவது லெப்போல்ட் அரசரின் ஸகோதருடைய புத்ரர். ஆல்பர்ட் அரசர் 1909-ம் வர்ஷம் பட்டத்துக்கு வந்தார்.

ஆல்பர்ட் அரசர் உயரமாய் ஒற்றைநாடியாக இருப்பார். இவர் சாந்தமும், அடக்கமும் பிறரிடத்தில் அன்பும் உள்ளவர். இவரிடத்தில் படாடோபம் என்பதே கிடையாது. தமது தேசத்தின் வ்யாபார வ்ருத்தியில் ரொம்ப ஊக்கம் பாராட்டுபவர். இந்த ஐரோப்பிய யுத்தத்தில் இவர் பெல்ஜியஸேனைகளின் தலைவராக இருந்துவருகிறார். ஜெர்மன் ஸைன்யங்களில் ரொம்ப சிறந்தவைகள் தமது தேசத்தைப் படை யெடுத்து வந்தபோது அவைகளை வெகு மன உறுதியுடனும் ஸாமர்த்யத்துடனும் எதிர்த்து அவைகளின் முற்போக்கை வெகு நாள் தடைசெய்ததைக் கொண்டு, பெல்ஜியத்

தின் அரசர் எவ்வளவு ஸாமர்த்யசாலி யென்பதை அறிந்து கொள்ளலாம். சென்ற 8-வர்ஷ காலமாக தமது தேசத்து ஸேனையில் ஜெனரல் என்னும் பதவியில் இருந்து வருகிறார். இவர் பால்யத்தில் வெகு ஜாக்ரதையாக யுத்த விஷயங்களில் பயிற்சி செய்விக்கப்பட்டார். 1890-ம் வர்ஷத்தில் இவர் ப்ரஸ்ஸல்ஸிலுள்ள போர்த் தொழில் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து போர்த் தொழில் பயின்று வந்தார். 1892-ம் வர்ஷத்தில் இவர் ஸைன்யங்களில் சேர்ந்தார்.

ஆல்பர்ட் அரசருக்கு இரண்டு புத்ரர்களும், ஒரு புத்ரியும் உண்டு.

## KING PETER OF SERVIA.

### ஸெர்வியாவின் அரசராகிய பீட்டர்.

1878-ம் வர்ஷம் வரையில் ஸெர்வியா என்னும் தேசம் துருக்கிக்குக் கீழ்ப்பட்ட ஒரு ஸ்வய அரசாட்சி நாடாக இருந்துவந்தது. அந்த வர்ஷம் பெர்லினில் செய்யப்பட்ட ஒரு உடன்படிக்கையின்படி ஸெர்வியா ஸ்வாதீனமுள்ள நாடாக ஏற்பட்டது. ஸெர்வியாவில் காராஜார்ஜிவிட்ச் என்றும், ஆப்ரினுவிட்ச் என்றும் இரண்டு ராஜ வம்சங்கள் உண்டு. இந்த இரண்டு வம்சங்களுக்கும் எப்போதும் விரோதம். 1903-ம் வர்ஷத்துக்கு முன்னால் ஆப்ரினுவிட்ச் வம்சத்தைச் சேர்ந்த அலெக்ஸாண்டர் என்னும் அரசர் ஆண்டுவந்தார். அவருடைய ஆட்சியில் ப்ரியங் கொள்ளாத அநேக ஸெர்வியர்கள் அவரைக்கொன்று விட்டு காராஜார்ஜிவிட்ச் வம்சத்தைச் சேர்ந்த பீட்டர் என்னும் இப்போதுள்ள அரசரை ஸிம்மாஸனத்தில் வைக்கவேண்டுமென்று எண்ணி அதற்கு வேண்டிய ஸதியாலோசனை முயற்சிகளைச் செய்தார்கள். பீட்டரும் அவர்களுக்கு உடந்தையாக இருந்து வேண்டிய முயற்சிகள் செய்தார். தாம் பட்டத்துக்கு வருவதற்கு முன்னால் இவர் எப்போதும் கலகக்காரர்களில் ஒருவராகவும், ஸதியாலோசனைக் காரர்களில் ஒருவராகவும் இருந்து வந்தாராம். அலெக்ஸாண்டர் அரசருக்குக் கல்யாணமானபோது அநேக கலகக் காரர்கள், இவருக்குச் சார்பாயிருந்து, அலெக்ஸாண்டரையும், அவருடைய மனைவியையும் கொன்று, பீட்டரை ஸெர்வியாவின் அரசராக ஏற்படுத்த வேண்டுமென்று ப்ரதிக்ஞை செய்தார்களாம். அந்த ஸதியாலோசனைக்காரர்கள் அலெக்ஸாண்டர் அரசரைக் கொல்வதற்கு அநேக முயற்சிகள் செய்து, கடைசியில் 1903-ம் வர்ஷத்தில் அலெக்ஸாண்டரையும் அவருடைய மனைவியையும் கொன்று பீட்டரை பட்டத்தில் வைத்தார்கள். பீட்டர் பட்டத்துக்கு வந்ததைப்பற்றி ஆஸ்ட்ரிய சக்ரவர்த்தியும், ரஷ்ய சக்ரவர்த்தியும் ஸந்தோஷப் பட்டதாகக் காட்டிக் கொண்டாலும், அலெக்ஸாண்டரைக் கொலைசெய்த கொலையாளர்களை தண்டிக்க வேண்டுமென்று தெரிவித்தார்கள். ஆனால் பீட்டர் தாம் ராஜ்யத்துக்கு வருவதற்கு உடந்தையாயிருந்த ஷை கொலையாளர்களை தண்டிக்க மனந் துணியவில்லை. இதன்மேல் இங்க்லண்ட், ப்ரான்ஸ், அமெரிக்க ஐக்ய மாகாணங்கள் முதலிய ராஜ்யங்கள் ஸெர்வியாவிலிருந்த தங்களுடைய ப்ரதிநிதிகளை அந்த தேசத்திலிருந்து வரவழைத்து விட்டார்கள். ஸெர்வியா அரசர் மூன்று வர்ஷம் கழித்து ஷை கொலையில் ஸம்பந்தப்பட்டவர்களை உத்யோகங்களிலிருந்து விலக்கி விட்டார். அதன்மேல் இங்க்லண்ட் முதலிய ராஜாங்கங்கள் தங்களுடைய ப்ரதிநிதிகளை ஸெர்வியாவுக்கு அனுப்பலாயின. இருந்தாலும் பீட்டர் அவருக்கு முன்னிருந்த அரசரின் கொலையில் ஸம்பந்தப்பட்டிருந்தா ரென்றஅபக்யாதி மாத்ரம் இன்னும் முழுவதும் போகவில்லை.

ஸெர்வியர்கள் வெகு காலமாக பல்கேரியா, ஸெர்வியாமுதலிய பல நாடுகளிலுள்ள ஸ்லாவ் ஜாதி ஜனங்களை ஒன்றுசேர்த்து ஒரே ராஜ்யமாக ஏற்படுத்த வேண்டுமென்று எண்ணங்

கொண்டிருக்கிறார்கள். இதற்குப் பீட்டர் அரசரும் உடந்தையாகவே இருக்கிறார்.

பீட்டர் அரசருக்கு இரண்டு புத்ரர்களும் ஒரு புத்ரியும் இருக்கிறார்கள். மூத்த புத்ரர் தமது தகப்பனருக்குப்பின் தமக்குப் பட்டம் வேண்டாமென்று சொல்லிவிட்டதால் இரண்டாவது புத்ரராகிய அலெக்ஸாண்டர் ராஜகுமாரர் இளவரசாக ஏற்படுத்தப் பட்டிருக்கிறார். மேலும் பீட்டர் அரசருக்கு 70-வயஸாகிறதாலும், அவர் ரொம்ப வ்யாதியா யிருப்பதாலும் இளவரசாகிய அலெக்ஸாண்டர் ராஜகுமாரர் அரசருக்குப் பதிலாக ராஜ்யபாரத்தை நிர்வகித்து வருகிறார்.

பீட்டர் அரசர் மாண்டிநிக்ரோவின் அரசராகிய நிக்கலாஸின் புத்ரி ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொண்டார். ஆனால் அவள் 1890-ம் வர்ஷம் இறந்துபோய் விட்டாள்.

இவரது இரண்டாவது புத்ரராகிய இளவரசரிடத்தில் ஜனங்கள் ரொம்ப விச்வாஸமாயிருக்கிறார்களென்று சொல்லப்படுகிறது.

## THE EMPEROR OF JAPAN.
### ஜப்பான் சக்ரவர்த்தி.

ஜப்பான் ராஜ்யம் ஸுமார் 2500 வர்ஷங்களுக்கு முன் ஸ்தாபிக்கப்பட்டதென்று சொல்லப்படுகிறது. அப்போது ஏற்பட்ட ராஜவம்சத்தைச் சேர்ந்தவர்கள் நாளது வரையில் ஜப்பானை ஆண்டு வருகிறார்கள். இப்போது ஆண்டு வரும் ஜப்பான் சக்ரவர்த்தி 2500 வர்ஷங்களுக்கு முன் ஏற்பட்ட வம்சத்தின் 123-வது அரசராவார். இவருடைய பெயர் யோஷிஹிட்டோ. இவருக்கு டென்னோ என்றும், கோட்டய் என்றும் பட்டப் பெயர்கள் உண்டு. ஆனல் அன்ய தேசத்தார்கள் இவருக்கு மிக்காடோ என்ற பட்டப் பெயரை உபயோகிக்கிறார்கள்.

யோஷிஹிட்டோ சக்ரவர்த்தி காலஞ்சென்ற ஜப்பான் அரசராகிய மட்ஸுஹிடோவின் மூன்றாவது புத்ரர். 1879-ம் வர்ஷம் கயோடோவில் ஜனனமானர். 1912-ம் வர்ஷம் பட்டத்துக்கு வந்தார். இவர் பால்யத்தில் ப்ரபுக்களுக்கு ஏற்பட்ட ஒரு காலேஜில் ப்ரைமரி வகுப்பிலும் உயர்தர வகுப்புகளிலும் நன்ருய்ப் படித்துத்தேறிய்பிறகு காலேஜைவிட்டு, அரண்மனையில் ஐரோப்பிய உபாத்யாயர்களிடம் வாசித்து வந்தார். இவருக்கு ஜப்பானிய பாஷையிலும் சீனபாஷையிலுமுள்ள இலக்கியங்களில் விசேஷ ப்ரீதியுண்டாம். அன்ய பாஷைகளில் ப்ரெஞ்ச் பாஷையில் விசேஷத் தேர்ச்சியுண்டு. இவருக்கு ராணுவ விஷயங்களிலும், கப்பல் படை விஷயங்களிலும் விசேஷ ஞானமுண்டு. இவர் ஸைன்யத்தில் லெப்டினண்ட்-ஜெனரல் பதவியிலும், கப்பல் படையில் வைஸ்-அட்மிரல் பதவியிலும் இருந்து வருகிறார். இவர் பட்டத்துக்கு வருமுன் அந்த ராஜ்யத்திலுள்ள ப்ரபுக்கள் ஸபை யென்னும் பார்லிமெண்ட் ஸபையில் சேர்ந்து ராஜாங்கக் கார்யங்களில் ரொம்ப ஊக்கங்காட்டி வந்தார்.

இவருக்கு 1900-ம் வர்ஷம் கல்யாணமாயிற்று. சக்ரவர்த்தினியின் பெயர் ஸாடா-கோ. சக்ரவர்த்திக்கு மூன்று புத்ரர்கள் உண்டு.

## KING NICHOLAS OF MONTENEGRO.
### மாண்டிநிக்ரோவின் அரசராகிய நிக்கலாஸ்.

மாண்டிநிக்ரோதேசம் வெகுகாலம் வரையில் பேருக்கு மாத்ரம் துருக்கிக்குக் கீழ்ப்பட்டதாய், ஆனல் உண்மையில் ஸ்வாதீனமுள்ளதாக இருந்து வந்தது. 1878-ம் வர்ஷத்தில் பெர்லினில் செய்யப்பட்ட ஒரு உடன்படிக்கையின்படி இந்த தேசம் துருக்கிக்குக் கீழ்ப்பட்டிராத ஒரு ஸ்வாதீனமுள்ள தேசமென்று எல்லா அரசுகளும் ஒப்புக்கொண்டன.

மாண்டிநிக்ரோவின் அரசருக்கு நிக்கலாஸ் என்று பெயர். இவர் 1841-ம் வர்ஷம் பிறந்தார். பால்யத்தில் ஆஸ்ட்ரியாவிலுள்ள ட்ரீஸ்ட்

என்னும் பட்டணத்திலும் பாரிஸிலும் கல்வி பயின்றார். 1860-ம் வர்ஷம் பட்டத்துக்கு வந்தார். அவருக்கு முதலில் 'ப்ரின்ஸ்' அதாவது ராஜகுமாரர் என்று பட்டப்பெயரிருந்தது. ஆனால் 1910-ம் வர்ஷத்தில் அந்த தேசத்து ஜனஸபையார் கேட்டுக்கொண்டதன்மேல் அவர் 'அரசர்' என்று பட்டம் வைத்துக்கொண்டார். இவருக்கு மூன்று குமாரர்களும், 6 புத்ரிகளும் இருக்கிறார்கள். இவருடைய புத்ரிகளில் ஒருவராகிய ஹெலினு ராஜகுமாரி இட்டலியின் அரசராகிய இம்மானுவலைக் கல்யாணம் செய்துகொண்டு, இட்டலியின் ராணியாக இருந்துவருகிறார். இன்னொரு புத்ரியாகிய ஸார்காவை ஸெர்வியாவின் அரசராகிய பீட்டர் கல்யாணம் செய்துகொண்டார். ஆனால் அந்தப் புத்ரி 1890-ம் வர்ஷத்தில் இறந்துபோய்விட்டார். கொஞ்ச காலத்துக்கு முன் நடந்த துருக்கி-பால்கன் யுத்தத்தில் முதல் முதல் யுத்தம் ஆரம்பித்தவர் மாண்டிநிக்ரோவின் அரசர்தான்.

**SULTAN MUHAMMAD V. OF TURKEY.**

துருக்கியின் ஸுல்தானாகிய ஐந்தாவது மகம்மது.

துருக்கியின் அரசருடைய பெயர் ஸுல்தான் ஐந்தாவது மகம்மது. இவர் 1844-ம் வர்ஷம் நவம்பர்மீ 3உ பிறந்தார். 1909-ம் வர்ஷம் ஏப்ரல்மீ 27உ பட்டத்துக்கு வந்தார். இவர் இவருக்கு முன் துருக்கியை ஆண்டு கொண்டிருந்த ஸுல்தான் அப்தல் ஹமீதின் ஸகோதரர். பட்டத்துக்கு வருவதற்கு முன்னால் 30 - வர்ஷகாலம் ராஜாங்கக் கைதியாக இருந்தார். அப்தல் ஹமீதின் காலத்தில் தேசத்தின் அரசாட்சி சீர்குலைந்திருந்தது. தேசாபிமானம் பூண்ட சில துருக்கியர்கள் 1909-ம் வர்ஷத்தில் அரசாட்சியை சீர்திருத்த எண்ணங்கொண்டு, கமிட்டி அப் யூனியன் அண்ட் ப்ரோக்ரஸ் என்று பெயர்கொண்ட ஒற்றுமை, முன்னேற்றத்துக்கான ஒரு ஸபை ஏற்படுத்தி ரொம்பவும் ப்ரயத்தனங்கள் செய்து அப்தல் ஹமீதை பட்டத்திலிருந்து விலக்கி மகம்மதைப் பட்டத்தில் வைத்தார்கள். இவர் வெகு காலம் லோக வ்யவஹாரங்களை யறியாமல் தனிமையில் இருந்துவந்ததால், இவருக்கு ரொம்ப அனுபோகம் கிடையாதென்று சொல்லப்படுகிறது. இவருக்கு இரண்டு புத்ரர்கள் உண்டு.

## PETROLEUM.

By S. R. ATHMANADHA AIYAR.

### மண்ணெண்ணெய்.

இது பூமியின் கீழிருக்கும் பெரும் கல்பாறைகளிலகப்படும் ஓர்வித எண்ணெய். இதனுடன்கூட உப்புஜலமும் கலந்தகப்படும். எண்ணெய் லேசானதுபற்றி ஜலத்தின்மேலே மிதக்கும். எண்ணெய் முழுதும் வெளிவந்தபிறகு உப்பு ஜலம் நிற்கும்.

இது அமெரிக்கா கண்டத்தில் பலவிடங்களிலும், ரஷ்யாதேசத்திலும், ஸுமாட்ரா, ஜாவா, போர்னியோ என்னுந் தீவுகளிலும், ஸுமார் இருபது வர்ஷங்களாக பர்மாதேசத்திலும் கிடைக்கிறது. எண்ணெயில் ஒருவகை மஞ்சள்நிறமாயும், ஒருவகை கொஞ்சம் சிவப்பாயும், மற்றோர்வகை ஊதா அல்லது கறுப்பு நிறயாயுமிருக்கும். இது 100-க்கு 84 பாகம் கரியும், 12 பாகம் ஜலவாயுவும் மற்றைய நான்குபாகம் கந்தகம் ப்ராணவாயு இவைகளின் ஸம்பந்தமாயுமிருக்கும்.

பூமியின் கீழே இந்த எண்ணெய் சேர்ந்ததற்குக் காரணமென்ன? பூமியின் கீழிருக்கும் நிலக்கரி, எரிமலையின் செயலால் எண்ணெயாய் மாறுகிறதென்று சிலர்கூறுவர். ஒருவகை மீன்கொழுப்பைகாய்ச்சி வடி கட்டுவதா

லுண்டாகிறதென்று கூறுவர் சிலர். ஜீவவர்க் கத்தைச்சார்ந்த உயிர் ப்ராணிகள், தாவர வர்க் கத்தைச்சேர்ந்த செடிமரம், ஆகிய இவைகள் செத்து அழுகி அவைகளிலிருந்து ஊறிப்புறப் படும் வஸ்து எண்ணெயாகிறதென்று வேறு சிலருடைய அபிப்ராயம். அநேக நூற்றாண்டு களுக்கு முந்தி பூமியின் கீழே மலைகளிலிருக் கும் தாதுக்கள் பௌதிகச்செயலால் வடிகட்ட பட்டு எண்ணெயாகிறதென்று இப்போது அநேகர் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

ஸுமார் இரண்டாயிரம் வர்ஷங்களுக்கு முந்தியிருந்தவர்கள்கூட இவ்வெண்ணெயை உபயோகித்தார்களெனத் தெரியவருகிறது. ஆயினும் பூமியிலதிக ஆழத்திலிருக்கு மெண் ணெயை எடுக்கமுயன்றார்களெனத் தோன்ற வில்லை. ஸுமார் நூறு வர்ஷங்களாகத்தான் இது உலகத்திலுபயோகத்திற்கு அத்யாவச்ய மான பொருளாக ஏற்பட்டது. ஏறக்குறைய 100 வர்ஷங்களுக்குமுன் அமெரிக்காதேசத் தில் உப்பு செய்வதற்காக உப்புஜலம் வேண் டிக்கிணறு வெட்டுகையில் எதிர்பார்க்காத வண்ணம் எண்ணெய் வந்ததைக் கண்டவர்கள் மிகத்துக்க மடைந்தார்களாம்! இன்னும் சில வர்ஷங்களுக்கப்பால் மற்றோர் கிணறு வெட் டும்பொழுது பெரிய ஏரி விஸ்தீர்ணமுள்ள எண்ணெய்க் களஞ்சியம் தென்பட்டுத் தீ மூண்டு ஸுமார் 40, 50 மைல் தூரம் தெரியும் படி மிகபயங்கரமாய் சுடர் விட்டெரிந்ததைப் பார்த்துத் துக்கித்தார்கள். பிறகு சிலர் இந்த எண்ணெயைப் புட்டிகளிலடைத்து மருந்தாக விற்பனை செய்தார்களாம். கொஞ்ச காலஞ் சென்றபிறகு திமிங்கிலங்கள் அரிதாவதுபற்றி, அக்காலம்வரையில் திமிங்கிலத்தின் கொழுப்பி லிருந்து எண்ணெய் எடுத்துவந்தவர்கள் எண் ணெய்க்கு இனியாது செய்வதென்றுதிகிலடை ந்தபொழுது இந்த எண்ணெய் மிக உபயோக மாயிருந்தது.

பூர்வகாலத்தில் இந்த எண்ணெயைச்சேர்ப்ப தற்கு உபாயம் யாதெனில், ஜலத்தின்மேல் மிதக்கும் எண்ணெயை ஆடையெடுப்பதுபோ லெடுப்பதேயாம். மணற்பாங்கான இடங்களி லெண்ணெய் உண்டாகும்பொழுது முப்பது நாற்பது கஜம்தூரம், அதிக ஆழமில்லாத கால் வாய்களைவெட்டி ஒரு கழியால் மணலைக்கலக் குவதால் மேலெழும்பும் எண்ணெயைச் சேக ரிப்பார்கள்.

ஒரு நிலத்திலெண்ணெய் அகப்படுமாவென ஆழத்தோண்டிப் பார்க்கவேண்டும். கொஞ்ச தூரம் தோண்டின மாத்ரத்திலேயே எண்ணெ யகப்படவில்லையென அதைர்யப் படலாகாது. கொஞ்ச ஆழம் வெட்டிவிட்டு, விடப்பட்ட இடங்களில் இன்னும் கொஞ்சதூரம் வெட்டிப் பார்த்தவர்களுக்குச் சரெலென்று எண்ணெய் கிளம்புவதுமுண்டு. ஸாதாரணமாய் ஒரு கிணற் றுக்கும் மற்றொன்றுக்கும் நான்கு அல்லது ஐந்து ஏகரா தூரமிருந்தால்தான் நலம். இப் படிக்கிணறு வெட்டுவதிலும் நிலத்தின் ஓரங் களில் கிணறுகளை முன்னதாகவெட்டி அங்கி ருக்கும் எண்ணெயை முதலிலே யெடுப்பது முக்யமாகும். இல்லாவிடில் வேறுசிலர் ஸமீ பத்தில் கிணறுவெட்டும் பட்சத்தில் இவ்வெண் ணெய் அக்கிணற்றுக்கு ஓடிப்போய்விடும்.

அதிக ஆழம்வெட்டாமல் 60, 70 அடி மாத் ரமே தோண்டினால் ஒருக்காலெண்ணெய் வந் தாலும் பூமியின்மட்டம் வரையிலுயர்ந்துவ ராது. ஆனதுபற்றி யந்த்ரத்தினுதவியால் அந்த எண்ணெயை வெளிவாங்க வேண்டிவரும். அதிக ஆழம்வெட்டினால் பூமி மட்டம்வரை யிலும் ஸாதாரணமாய் வரும். சில ஸமயங் களில் திடீரென்று எண்ணெய் 40, 50 அடி உயரம் வரையிலுங்கூடக் கிளம்பும். இப்படிக் கிளம்புவதால் சில மணி நேரத்திற்குள்ளாக கோடிக்கணக்கான டின் எண்ணெய் வ்யர்த்த மாகும். இப்படிச் சேதமாகாதபடி மனிதர்

கள் தோலால் செய்யப்பட்ட ஆடைகளையணிந்து, உலோகத்தால் செய்த தலைச்சீராக்களைத் தலைகளில் தரித்து, எஃகாலியற்றப்பட்ட பெரிய குல்லாபோன்ற மூடிகளைக் கிணற்றின் மேல் போடுவார்கள். இப்படிச்செய்வது மிகக் கஷ்டமான கார்யம். பூமியிலிருந்து இப்படி வர்ஷந்தோறும் எடுக்கு மெண்ணெயின் விலை மதிப்பு ஸுமார்முப்பதுகோடி ரூபாயாகிறது. இந்த எண்ணெயை ஒருங்குசேர்த்தால் பெரிய கப்பல்கள் மிதக்கும்படியான அவ்வளவு விஸ்தீர்ணமான ஸமுத்ரம் போலாகுமாம்.

நீராவியந்த்ரத்தின் ஸகாயத்தால், கருவிகள் பூமியின் கீழே தோண்டிச் செல்லும்படிக்கும், தோண்டும்பொழுது கிளம்பும் மண், களிமண், ஜலம் ஆகிய இவைகளைவெளியிற் கொண்டுவருவதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. பூமியின்கீழே தோண்டிச் செல்லச் செல்ல, பக்கங்களில் தளமான மரப்பலகைகளாலும் துண்டுகளாலு மடைத்துக்கொண்டு போகவேண்டும். இல்லாவிடில் பக்கங்கள் தூர்ந்துவிழுவதாலும், ஊறும் ஜலப்பெருக்காலும் கெடுதிநேரிடும்.

முன்காலத்தில் எண்ணெயை எடுத்துவருவதற்குத் தோண்டிகளும், பீப்பாய்களும் உபயோகப் படுத்தப்பட்டன. பிறகு குழாய் வழியே வெகுதூரம் கொண்டுவருவதற்கு ஏற்பாடு செய்தார்கள். அதிகதூர தேசங்களுக்கு ரயில்மார்க்கமா யனுப்பும்பொழுது இதற்காக ப்ரத்யேகமாய் எஃகால் செய்யப்பட்ட பெரிய குளங்களிலும், ஸமுத்ரமார்க்கமா யனுப்பும்பொழுது கப்பல்களிலும் நிரப்பி யனுப்புவார்கள்.

கிணறுகளிலிருந்து எண்ணெய் கிளம்பி வரும்பொழுது அது தீப்பற்றாமலிருக்க ஸாதனம் தேடிக்கொள்ளவேண்டும். இல்லாவிடில் அகஸ்மாத்தாய்த் தீமூண்டால் அனர்த்தம் விளையும். அப்போது நீராவியாலும், உலோகத்தால் செய்த பெரிய குல்லாபோன்ற மூடியாலும் அத்தீயை அவிப்பார்கள். சில ஸமயங்களில் எஃகால் செய்த கிராதிகளையும் கம்பிகளையும் ஜ்வாலையின் மீது இழுப்பதாலும் அணைப்பதுண்டு. கப்பல்களில் பெரிய குளங்கள்போன்ற விசாலமான களஞ்சியங்களில் இந்த எண்ணெயைக்கொண்டு வருகிறார்களென்று முந்தியே சொன்னோம். இக்கப்பல்கள்கூட தீப்பற்றாவண்ணம் மிக ஜாக்ரதையாயிருக்கவேண்டும். ஒருக்கால் தீமூண்டால் ஸமீபத்திலிருக்கும் கப்பல்களும் தீப்பிடிக்குமல்லவா? சில மாஸங்களுக்கு முன் ரங்கூனிலிருந்து இந்த எண்ணெயைக் கொண்டுவந்த 'ட்வின்கான்' என்னும் கப்பல் தூத்துக்குடி துறைமுகத்தில் தீப்பற்றி ஆயிரம் டன் எண்ணெயுடனெரிந்து 10, 15-மைல் தூரம்வரையில் ஜ்வாலைதெரியும்படி அநேக நாள்வரையிலெரிந்தது.

இந்த எண்ணெயை பூமியிலிருந்து எடுத்தவுடன் உபயோகப்படுத்தமுடியாது. இதை வடிகட்டினால்தான் இது நின்று எரிவதற்கு ப்ரயோஜனமாகும். இப்படி வடிகட்டுவதால் எரிப்பதற்காக எண்ணெயும், வாயுவை உண்டாக்குவதற்குரிய எண்ணெயும், யந்த்ரங்கள் வழுவழென்றிருக்கச் செய்யும்பொருட்டு உபயோகமான எண்ணெயும், ஒருவகை மெழுகும் கிடைக்கின்றன. பாகப்படாத எண்ணெயைக் காயங்களை ஆற்றுவதற்கும், தோலுக் கடுத்த நோய்களுடைய பரிகாரத்திற்காகவும் உபயோகப்படுத்துகிறார்கள்.

இந்த எண்ணெயினின்றும் சீக்ரம் ஆவியாய்ப் போகக்கூடிய சிலவஸ்துக்களை நீக்கி வடிகட்டி விட்டால், கப்பல்களை நடத்துவதற்கும், மோட்டார் வண்டிகளைச் செலுத்துவதற்கும் உபயோகமாகிறது. இதுவரையில் கப்பல் ஓட்டிச்செல்லுவதற்கு முக்கியமாய் நிலக்கரியல்லவா உபயோகித்து வந்தார்கள்? இப்

பொழுது ஸுமார் 4, 5, வர்ஷகாலமாய் இந்த எண்ணெயை உபயோகித்து வருகிறார்கள். இப்படி உபயோகிப்பதால் மிகமுக்யமான சில பயன்களை நாமடைகின்றோம். அவையாவன;

முதலாவது, நிலக்கரி இன்னும் ஸுமார் 50 வர்ஷங்களுக்கு மேலகப்படாதென்று கூறுகிறார்கள். இந்த எண்ணெயோ அநேகவிடங்களில் ஏராளமாய் கிடைப்பதால் அம்மாதிரி பயமில்லை.

இரண்டாவது, மூன்று டன் நிலக்கரி எவ்வளவுவேலை செய்யுமோ அதேவேலையை இரண்டு டன் எண்ணெய் செய்யுமாம்.

மூன்றுவது, 67 கன அடிகளில் பரவிக்கொள்ளும் நிலக்கரிக்கு எவ்வளவு உஷ்ணசக்தி இருக்கிறதோ அதேசக்தி 36 கன அடிகளை ஆக்ரமிக்கும் எண்ணெய்க்கு உண்டு.

நான்காவது, நிலக்கரியை உபயோகிப்பதில் யந்த்ரச்சூளையைக் காப்பதற்கும் மற்றும் சில்லரைவேலைக்கும் அநேக வேலையாட்கள் தேவை இவர்களுக்கு உணவுக்காகவேண்டிய ஸாமான்களை சேகரித்துவைப்பதற்கும் கப்பல்களில் இடம் வேண்டும். எண்ணெயை விறகாக உபயோகிப்பதில் இவ்வளவு மனிதர்கள் தேவையில்லை. வேலையில் கைதேர்ந்த சிலர் இருந்தால் போதும். இக்காரணங்கள்பற்றி சண்டைக்கப்பல்களுக்கு இப்பொழுது எண்ணெயையே விறகாய் உபயோகிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். நிலக்கரியை உபயோகிப்பதைக் காட்டிலும் இவ்வாறு எண்ணெயை உபயோகிப்பதில் இடம் கூடிவருவதால் அந்த இடத்தில் அதிகப் போர்வீரர்களையாயினும் துப்பாக்கி பீரங்கிக் குண்டுகளையாயினும் ஏற்றிக்கொள்ளலாமல்லவா? இக்காரணங்கள்பற்றி யுத்தத்தில் இந்த எண்ணெய் மிகுந்த உபயோகத்தைத் தருகிறது.—எஸ். ஆர். ஆத்மனுத அய்யர்.

## HINTS ON GRAFT MANGO CULTIVATION.

BY N. S. KRISHNASWAMI AIYAR, SALEM.

## ஒட்டுமாஞ்செடி ஸாகுபடியைப்பற்றிய குறிப்புகள்.

### வேலியமைப்பு.

1. "வேலி பயிரைக்காக்கும்" என்ற வாசகப்படி அதிகமான விலை கொடுத்து வாங்கி வைக்கப்பட்ட செடிகளுக்கு வேலியமைப்பு அதிக முக்யமானது. தனித்தனியாய் ஒவ்வொருசெடிக்கும் வேலி போடவேண்டியதில்லை. தோட்டத்தைச் சுற்றிலும் பந்தோபஸ்தாய் கிளுவைவேலிபோட்டு, அதன் பக்கத்தில் கொருக்காய்ப் புளி விதைகளை நட்டுவிட்டால் மழையீரத்திலேயே கிளுவையும் தழைத்துவிடும். கொருக்காய்ப்புளி விதைகளும் முளைத்துவிடும். வேலியோரங்களில் டிவிடிவி செடிகளையும் பயிர் செய்துவிட்டால் அதனுலும் லாபமுண்டு. வேலியமைப்பு தீர்ந்ததும் மேடுபள்ளங்களெல்லாம் ஸமப்படுத்தி, தாக்குத் தாக்குகளாய்ப் பிரித்து ஒவ்வொரு தாக்கிலும் ஒவ்வோர்தினுஸு மாஞ்செடியை வைத்துப் பயிராக்கலாம். அப்படிப் பயிராக்குவதனுல் என்ன அனுகூலமென்றால், தினுஸுகள் இன்னின்ன விடங்களிலிருக்கின்றனவென்று கேட்பவர்களுக்குக் காட்டலாம். ஒவ்வொருதாக்கின் நாலாபக்கங்களிலும் மண்மேடுபோட்டு வைப்பதனுல் மழைக்காலத்தில் தண்ணீர்நின்று செடிகளுக்குவேண்டிய ஈரத்தைக்கொடுக்கும்.

### பூமி.

2. களர் பூமி நீங்கலாக மற்ற எவ்விதபூமியிலும் ஒட்டுமாஞ்செடிகள் வைத்துப் பயிராக்கலாம். அதிக நீர்ப்பிடிப்புள்ள பூமியும் கெடுதலானதே.

### செடிகள் வைக்கவேண்டிய தூரம்.

3. செடி வ்யாபாரிகளைக்கேட்டால் அவர்கள் தங்களுக்கு அதிகமானசெடிகள் விற்பனையாகுமென்ற எண்ணத்துடன் ஒரு ஏக்கர் பூமியில் 25-30 செடிகள்வரையில் வைக்கலாமென்று சொல்லுவார்கள். தோட்டக்காரர்களும் தங்கள் தோட்டத்தில் அதிகமான செடிகள் இருக்கவேண்டுமென்ற ஆசையோடு அவர்கள் சொல்லுகிறபடியே வாங்கிவைத்துவிட்டு பெருத்த பிறகு மரங்கள் யாதொரு பலனையும் கொடுக்க வில்லையே என்று முறையிடுகிறார்கள். மரங்களும் அதிக நெருக்கமாய் ஒன்றுக்கொன்று முட்டிக்கொண்டு கிளைகள் அதிக கீழாகத் தாழ்ந்து பலனில்லாமல் இருக்கையில், கிளைகளை வெட்டிவிடலாமா, நடுவே ஒவ்வொரு மரத்தை எடுத்துவிடலாமா என்றும் அதிக பரிதாபமாய்க் கேட்கிறார்கள். அப்படிச்செய்யாமல் செடிகள் பெருத்து பலனுக்குவரும் தருணத்தில் ஒவ்வொரு செடிக்கும் செவ்வையாய் வெயில் படும்படியாயும், நல்ல காற்றோட்டம் உண்டாகும்படியாயும் ஒவ்வொரு செடிக்கும் 50 அடி இடைவெளியிருக்கும்படி வைப்பது உத்தமம். இவ்வாறுவைத்தால் ஒரு ஏக்கர் பூமியில் 20 செடிகள்தான் வைக்கலாம். அதிகமான செடிகள்வைத்து கொஞ்சப்பலன் அடைவதைவிட கொஞ்சம் செடிகள்வைத்து அதிக பலன் அடைவது எவ்வளவு நன்மை. அதிகமான செடிகளுக்கு ஆசைப்படவேண்டாம்.

### குழிகள்.

4. குழிகள் ஒரு கஜம் சதுரம், ஒரு கஜ ஆழம் இருக்கவேண்டும். அந்தக் குழிகளில் பாதிக்கு மேல் மண்ணைத்தள்ளி ஒட்டுச் செடிகளுள்ள சட்டியை உடைத்துவிட்டு அச்செடியை மண் கட்டியோடு குழியின் நடுவில் வைத்து சுற்றிலும் மண்ணைத்தள்ளி, செவ்வையாய் காலால் மிதித்துவிட்டு ஒட்டியிருக்கும் பாகம் மண் மட்டத்துக்கு மேலாகவே யிருக்கும்படி செய்ய வேண்டியது. பிறகு காற்றினால் அச்செடி ஆடாமல் ஒரு மூங்கில் நட்டு அதோடு செடியைக்கட்டி வைக்கவும். இவ்வாறு செய்த பின் தண்ணீர் ஏராளமாய்ப் பாய்ச்சி குழியின் மண் ஈரமாகும்படி செய்யவும். ஒட்டின்மேல் சுற்றியிருக்கும் மெழுகுத்துணி தானாகவே விழுகிற வரையில் தினந்தோறும் போய்ப் பார்த்து அதில் கரையான் ஏறாமல் பார்த்து வரவும்.

### எரு.

5. மாமரத்துக்கு யாதொரு எருவும் தேவையில்லையென்பது எனது அபிப்ராயம். வைக்கும்போது மட்டும் குழிகளில் சப்பாத்திக் கள்ளியை சிறு சிறு துண்டுகளாய் வெட்டிப்போட்டு அதில் தண்ணீர் பாய்ச்சி அழுகவிட்டு அதின்மேல் மண்ணைத்தள்ளி செடிகள் வைத்து விடவேண்டியது. பிறகு மரங்கள் பெருத்து அவைகளில் பழுத்து விழும் சருகுகளை மரத்தினடியிலேயே மக்கும்படி செய்வதே அதற்குத் தகுந்த எருவாம். வர்ஷா வர்ஷம் தவறாமல் மரத்தைச் சுற்றிக்கொத்திவிட்டு மக்கின இலைகளைக் கலந்து வைத்து செடியைச் சுற்றிலும் முளைத்திருக்கும் களைப் பூண்டுகளை வேருடன் பிடுங்கி விட்டு சுத்தமாய் வைத்திருப்பதே போதுமானது. மக்கின இலை யெருவில் வேண்டிய ரஸாயன ஸத்துக்கள் கலந்திருக்கின்றன.

### நீர் பாய்ச்சல்.

6. செடிகள் வைத்து 4-5 வர்ஷங்கள் வரையில் வாரத்துக்கு 2-3 தண்ணீர் பாய்ச்சி ஈரம் காயாமல் பார்த்து வரவேண்டியது. பிறகு கோடையில் மட்டும் வாரத்துக்கு ஒரு தண்ணீர் பாய்ச்சினால் போதும். செடிகளைச் சுற்றிலுமுள்ள காலி நிலத்தில் கொத்தி ஏதாவது தோட்டப்பயிர் செய்து அதற்கு தண்ணீர் பாய்ச்சி வந்தால் அந்த ஈரமே செடிகளுக்கும் தாக்கும். பூ பூத்து பிஞ்சுகள்

சுண்டைக்காய், கடுக்காய் ப்ரமாணம் ஆகும் போது வெயில் அதிகமாய் இருந்தால் ஒன்று அல்லது இரண்டு தண்ணீர் பாய்ச்சினால் போதும். பூத்திருக்கும்போது தண்ணீர் பாய்ச்சினால் பூக்கள் அடியோடு கொட்டுண்டு போகும்.

பலன்.

7. ஒட்டுச் செடிகள் வைத்த மறு வர்ஷமே செடிகள் பூக்க வாரம்பிக்கும். அப்பூக்களைக் கிள்ளிவிடவேண்டும். இவ்வாறு 2-3 வர்ஷங்கள் செய்யலாம். நான்காவது வர்ஷம் முதல் பூவை விட்டு விடலாம். அப்போது ஒரு மரத்துக்கு 50-காய்கள் போல் கிடைக்கும். 5-வது வர்ஷமுதல் 10-வது வர்ஷம் வரையில் மரத்துக்கு 100 காய்களுக்கு மேலேயே கிடைக்கும். 10-வது வர்ஷ முதல் ஒரு மரத்துக்கு 400 காய்களுக்கு மேலாகவே கிடைக்கும். வயது ஏற ஏற அதிகமாய் காய்கள் பிடிக்கும். ஆனால் நாட்டு மரங்களைப் போல் ஒட்டு மரங்களில் வர்ஷம் தவறாமல் காய்க்காது. ஒரு வர்ஷம் குறைவாயும் மறு வர்ஷம் அதிகமாயும் காய்க்கும். காய்கள் செவ்வையாய் முற்றிய பக்வம் தெரிந்து பெரிய மூங்கிலின் நுனியில் ஒரு வலையைக் கட்டி அதற்குள் காய்கள் விழும்படியாய் அறுத்து, நெல் வைக்கோலில் மூடி காற்றோட்டமில்லாத ஓர் அறையில் வைத்திருந்தால், காய்கள் செவ்வையாய்ப் பழுத்து நல்ல நிறமுள்ளனவா யிருக்கும். பிறகு விற்பனைக்கு வெளியே கொண்டு வரலாம்.

வ்யாதிகள்.

8. பழத்திற்குள் வண்டு காணப்படுதல்.—இது சில இனிப்பான ஜாதிகளில் காணப்படுகிறது. இந்த வண்டு எப்படி உண்டாகிறதென்று அநேகருக்கு அதிசயமாய்த் தோன்றும். "கல்லுக்குள் தேரை போல்" கனிக்குள் வண்டு உண்டாவது அதிக அதிசயமானதே. எப்போதும் இவ் வண்டுகள் மரங்களிலேயே குடியிருந்துகொண்டு மரங்களில் பூத்துப் பிஞ்சுகளாகும் காலங்களில் இந்த வண்டுகள் முட்டை யிடும். இம் முட்டைகள் ஸூர்ய வெப்பத்தினாலேயே புழுக்களாகின்றன. இந்தப் புழுக்கள் அதிக சிறியவைகளாய் மயிரிழை போல் அதிக மெல்லியனவா யிருக்கும். இப் புழுக்கள் மெதுவாய் நகர்ந்துபோய் கொட்டை முற்றாத அக் காய்களின்மேல் துளைத்துக்கொண்டு உள்ளேசென்று உள்ளிருக்கும் பருப்பைத் தின்று பெருத்து உள்ளேயே வண்டு ரூபமடைகின்றன. புழு உள்ளே போனதும் அது துளைத்துக்கொண்டுபோன ஓட்டை மூடிக்கொள்ளுகிறது. காய் முற்றி கொட்டை பிடித்து பெருத்து பழுத்த பின் அப் பழத்தை யறுத்தால் உள்ளே வண்டு காணப்படுகிறது. இவ்வாறு சில நாட்டு மா மரங்களில் வண்டு காணப்படுகிறதே ஒழிய ஒட்டு மரங்களில் இல்லை. ஆகையால் ஒட்டு மரங்கள் ச்லாக்யமானவை.

கரையானால் அதிகமான கெடுதியுண்டு. இவை செடிகளின் வேர்களிலும் மரத்தின் மேலும் மண்ணைக் கட்டிக்கொண்டு மரத்தைத் தின்றுக்கொண்டே வரும். இதை அடிக்கடி கவனித்துப் பாதுகாக்க வேண்டும்.

மரத்தின்மேல் வேறு விதமான கொடிகள் படர்ந்து கிளைகளைக் கவர்ந்து கொள்ளுகின்றன. அநேகர் அதைக் கவனிக்காமலே விட்டுவிடுகிறார்கள். அப்படி விடுவது மரத்தின் வளர்ச்சியைக் கெடுத்து விடும்.

இது போன்ற வேறு சில வ்யாதிகளும் உண்டாகும். அவைகளை கவனித்து அவைகளுக்குத் தகுந்த சிகித்ஸை அப்போதைக்கப்போது செய்து வந்தால்தான், அம் மரங்களில் தகுந்த பலனை யடையலாம். நம்முடைய பாதுகாப்புக்குத் தகுந்த பலன் கிடையாமற் போகாது.

என். எஸ். க்ருஷ்ணஸ்வாமி அய்யர்,

## SERPENT BITES AND THEIR TREATMENT.

### பாம்புக்கடியும், அதற்கு வைத்யமும்.

விஷப்பாம்புகள், முக்யமாய் நல்ல பாம்பு என்றும் விரியன் என்றும் இருவகைப்படும். இவைகளின் விஷங்களில் ஒரு மாதிரி வேக்காடை உண்டாக்கக்கூடிய வஸ்து ஒன்று இருக்கிறது. அதை 158 டிகிரீ டெம்பெரேச்சருக்குக் காயவைத்தால், அவ்வீர்யம் செத்து விடுகிறது. ரத்தத்திலுள்ள "கார்பஸில்" என்று சொல்லப்பட்ட அணுக்களை பாம்பின் விஷம் கரைத்து விடுகிறது. மேல் சொன்ன வேக்காடை உண்டாக்கக்கூடிய வஸ்துவைத் தவிர, வேறுவித விஷஸாமான்களும் அதில் இருக்கின்றன.

பாம்புக்கடியால் மரணம் நேரிடுவது முக்யமாய் இரண்டு வித விஷத்தால்தான். ஒரு வித விஷம் தேகத்தின் நரம்பு ஏற்பாடுகளை க்ஷீணப்படுத்தி, மூச்சுவிடும் வழிகளை அடைத்து, மூச்சு முட்டி மனிதனை சாக அடிக்கும். இந்த விஷத்திற்கு "ந்யூரோடாக்ஸின்" என்று பெயர். மற்றொரு வகை விஷம் தேகத்திற்குள் போய் ரத்தத்தைக் கட்டியாக்கி, மறுபடி அதை இளகச்செய்து, ரத்தமோடும் வழிகளை நாசம் பண்ணி, வீக்கத்தை உண்டாக்குகிறது. இதன் பெயர் "ஹெமொராகின்." இந்த இரண்டுவித விஷங்களும் எல்லா விஷப்பாம்பு விஷங்களிலும் இருக்கின்றன. ஆனால் நல்ல பாம்பு விஷத்தில் ந்யூரோடாக்ஸின் அதிகமாகவும், விரியன் விஷத்தில் ஹெமொராகின் அதிகமாகவும் இருக்கின்றன. ஆதலால் தான் நல்ல பாம்பு கடித்தால், மனிதன் எல்லாம் ஆய்ந்தோய்ந்து மூர்ச்சை போட்டு மயங்கி, மூச்சு விட முடியாமல் கீழே விழுந்து விடுகிறான். ஆறு மணி நேரத்துக்குள் அவனது காலம் முடிந்து விடும். ஆனால் மூச்சு நின்று இரண்டு மணி வரையில் கூட ஹ்ருதயம் அடிக்கலாம். விரியன் பாம்பு கடித்தால், கடித்த இடத்தில் ஸகிக்க முடியாமல் வலி உண்டாகும்; கடித்த பாகம் வீங்குகிறது; நரம்புகளெல்லாம் ரணமாய் பிடித்து இழுக்கின்றன. நாவு வரண்டு, தீராத தாகமெடுக்கிறது. கண் வழியாகவும், வேறு வழியாகவும் ரத்தம் பெருகும். சின்னங்கள் ஏற்படுவது கடியைப் பொறுத்தது. நாம் துணிகள் தரித்துக்கொண்டிருந்தால், அத்தனை விஷம் உள்ளிறங்காது. ஆனால், வீக்கம் சில வேளைகளில் ஜாஸ்தியாகி ஸ்வஸ்தமாவதற்கு அதிக நாட்கள் பிடிக்கும். விரியன் பாம்பு குழந்தைகளைக் கடித்தால், அவர்களது வளர்ச்சி குறைந்து விடும். அது சிரஸிலோ, கழுத்திலோ கடித்து விட்டால் பிழைப்பது ச்ரமம். சில ஸமயங்களில், கண்களும் குருடாய் விடலாம். மேல் சொன்ன சின்னங்களைக் கொண்டு நல்ல பாம்பு கடித்ததா, விரியன் கடித்ததா என்று அறிந்து கொள்ளலாம். சில நிபுணர்கள், கடித்த பற்களின் நீளத்தை தேகத்தில் பார்த்து, இன்ன பாம்பு கடித்ததென்று சொல்லி விடுகிறார்கள்.

எவ்வளவு விஷத்தை பாம்பு தேகத்தில் கக்குகிறதோ, அவ்வளவுக்கும் அதன் வீரியம் இருக்கும். சில ஸமயங்களில், பாம்புகள் ஒருவன் பின் ஒருவனைப் அநேகம் மனிதர்களை கடித்து விடுகின்றன. அப்பொழுது, கடைசியில் கடித்தவன் தேகத்தில் விஷம் மிகக் குறைவாயிருக்கும். வெறுந் தேகத்தில் கடித்தால் விஷம் ஜாஸ்தியாயும் துணிமேல் கடித்தால் குறைச்சலாயு மிருக்கும். தவிர, பெரியவர்களைக் கடித்தால் மரணம் குறைவாயும் சிறுவர்களைக் கடித்தால் ஜாஸ்தியாயு மிருக்கும்.

கீரிப்பிள்ளை போன்ற சில ம்ருகங்கள் விஷப் பாம்பு கடித்தாலும் கூட பிழைத்து விடுகின்றன. ஸ்வதாவாகவே, பாம்பின்

விஷம் இவைகளை ஒன்றும் செய்கிறதில்லை. சில பாம்பாட்டிகள் கூட பாம்பின் விஷத்துக்கு பயப்படுகிறதில்லை. இவர்களிடம் ரகஸ்ய மருந்தோ,மந்த்ரமோ இருக்கவேணும். ஆனால்,இதைப்பற்றி ப்ரேஸர் என்பவர் சொல்வது என்னவென்றால், சிறு பூனைகளுக்கும், வெள்ளை எலிகளுக்கும் கொஞ்சங் கொஞ்சமாய் விஷத்தை வாயின் வழியாய்ப் புகட்டி வந்தால், அவைகளை அப்புறம் பாம்பு கடித்தால் இறக்கிறதில்லையாம். இது போலவே, பாம்பாட்டிகளும் வர்ஷந்தோறும் சிறு பாம்பைக்கொண்டு தம்மை கடிக்கவிட்டுப் பழக்கிக் கொள்கிறார்களென்று ப்ரேஸர் நம்புகிறார்.

பாம்புக்கடிக்கு கால்மெட் என்பவர் ஒரு ஔஷதம் கண்டு பிடித்திருக்கிறார். பாம்பின் விஷத்தையும் 'ஹைப்போக்ளோரைட் அவ்லைம்' என்னும் வஸ்துவையும் சேர்த்து ஒரு குதிரையின்மேல் குத்திச் செலுத்துகிறார்கள். மூன்று நாலு நாட்கள் விட்டு விட்டு இப்படி விஷத்தை குதிரையின் தேகத்திற்குள் செலுத்தி வந்து, வரவர க்ளோரைட் அப்லைமைக்குறைத்து கடைசியாய் அதை நிறுத்தியே விடுகிறார்கள். 16 மாதம் இம்மாதிரி செய்யவேண்டுமாம். இப்படிச் செய்தால், அந்தக் குதிரையின்மேல் 30 க்ரெயின் அதாவது மனிதனைக் கொல்வதற்கு வேண்டியதை விட 80 மடங்கு அதிகமாக விஷத்தைக் குத்தி உள்ளே செலுத்தினாலுங் கூட அது சாகாது. அதிலிருந்து ஒரு 'ஸீரம்' (பால்) எடுக்கலாம். குதிரையின் ரத்தத்தை சில நாள்கள் விட்டு விட்டு மூன்று தடவையாக யெடுக்கிறார்கள்.

இந்த ரத்தத்திலிருந்து ஸுமார் பேர்பாதி பால் தேருகிறது. இதை சீஸாக்களில் வடித்து ஸீல்போட்டு வ்யாதி க்ருமிகள் அணுகாமல் 'ஸ்டெரிலைஸ்' செய்து விடுகிறார்கள். இப்படிச் செய்த பால் வெகு வர்ஷங்கள் நிற்கும். இன்னும் இந்தப்பாலை காயுவைத்து 15·4 க்ரெயின் மாத்ரைகளாக வைத்தால் இன்னும் அதிக வர்ஷங்கள் இருக்கும். இதை வேண்டும்போது காய்ச்சி ஆறின ஒரு ஔன்ஸில் மூன்றிலொருபாகம் ஜலத்தோடுகலந்து உபயோகிக்கலாம்.

பாம்பு கடித்ததும் மேல் சொன்ன பாலில் ஒரு ஔன்ஸில் மூன்றில் ஒன்று முதல் அல்லது இரண்டு பாகம் வரையில் வயதுக்குத் தக்கபடி பாலைக்குத்தி செலுத்தினால், விஷம் ஏறாது. கடித்த பாம்பு பெரியதாயாவது அல்லது அதிக விஷமுள்ளதாயாவது இருந்தால் ஒரு ஔன்ஸும் குத்தி ஏற்றலாம். எப்போதும் பாம்பு கடித்ததும் கடித்த இடத்தை நன்றாய்ச் சுரண்டி, சுட்டு விடவேண்டும். உடனே 'பொட்டாஷியம் பெர்மாங்கனேட்டோ' ஹைப்போக்ளோரைட் அவ்லைமோ' புண்ணில் அமிழ்த்தி தடவி விடுவது உத்தமம். இப்படிச் செய்வதால் அநேகம் பேர்கள் பிழைத்து விடுக்கிறார்கள். பாம்பு கடித்தவனுடைய அந்த்ய காலத்திலுங்கூட, இந்த பாலைக் குத்திச் செலுத்தினால் கடித்தவன் பிழைத்து விடுவானாம். இந்தியாவில் மேற் சொன்ன மாதிரி சிகித்ஸை செய்ய ஜனங்கள் ஸம்மதிப்பதில்லை யாதலால் பாம்புக்கடியால் மரண விகிதம் அதிகமாக இருக்கிறது.

மேற் சொன்ன சிகித்ஸையில் எந்த விஷப் பாம்பு கடிக்கிறதோ அதே ஜாதி விஷத்தை எடுத்துத் தயாரித்த பால் தான் ப்ரயோஜனப்படுமென்று சிலர் எண்ணினதால், எல்லா விஷப் பாம்புகளின் விஷங்களையும் குதிரையின் ரத்தத்தில் செலுத்தி பிற்பாடு பாலெடுத்து அதை எல்லா பாம்புக்கடிகளுக்கும் உபயோகிக்கிறார்கள்.

## THE ECONOMIC POSITION OF ENGLAND AND GERMANY.
## இங்க்லண்ட், ஜெர்மனி இவைகளினுடைய பொருளாதார நிலைமை.

இப்பொழுது நடக்கும் ஐரோப்பிய யுத்தத்தில், இங்க்லண்டும் ஜெர்மனியுமே முக்ய எதிரிகள். இங்க்லண்டின் பொக்கிஷ மந்த்ரியாகிய மிஸ்டர் லாய்ட் ஜார்ஜ் சொன்னபடி இந்த யுத்தம் வெகுகாலம் நடக்கும் போலிருக்கிறது. இந்த இரண்டு கக்ஷிகளில் யார் பிடித்து நின்று ஒரு நாளைக்கு கூட சண்டை செய்கிறுரோ அவருக்கே ஜயமென்று சொல்ல வேண்டியதாகும். இப்படிச்செய்வது இரண்டு கக்ஷிகளுடையவும் பணமிதப்பை பொறுத்ததாகிறது. அது இரண்டு கக்ஷிக்காரர்களுடையவும் பொருளாதார நிலைமையைப் பொருத்திருக்கிறது. ஆகையால் இந்த வ்யாஸத்தில் அதை விசாரிப்போம்.

இங்க்லண்ட், ஜெர்மனி இவைகளுடைய பொருளாதார நிலைமையைப் பற்றிய சில அம்சங்களை கீழே தருகிறோம்.

| நம்பர். | அம்சம். | இங்க்லண்ட். | ஜெர்மனி. |
|---|---|---|---|
| 1 | நிலக்கரி விளைவு (1911-ம் வர்ஷத்தில்) ... | 27,62,00,000 டன் | 23,45,00,000 டன் |
| | 1886-முதல் 1911 வரையில் நூற்றுக்கு எவ்வளவு அதிகரித்திருக்கிற தென்பது ... | 72·6 | 218·1 |
| 2 | 1910-ம் ஞு-த்தில் செய்யப்பட்ட எஃகின் அளவு ... | 61,06,800 டன் | 1,36,98,600 டன் |
| | 1886 முதல் 1910 வரையில் எஃகு நூற்றுக்கு எவ்வளவு அதிகரித்திருக்கிறதென்பது ... | 154·1 | 1,335 |
| 3 | பருத்தித்தொழில்: 1888-முதல் 1909-வரை எத்தனை ராட்டினங்கள்கள் அதிகம் ... | 1,28,60,000 (லங்காஷையரில் மாத்ரம்) | 50,63,000 |
| 4 | சென்ற 30-ஞு த்தில் வ்யாபாரக் கப்பல் அபிவ்ருத்தி ... | நூற்றுக்கு 77·7 | நூற்றுக்கு 156 |
| 5 | கப்பல் கட்டுதல்— | | |
| | i. 1898 முதல் 1904 வரையில் கட்டப்பட்ட கப்பல்களின் நிறை; ஒரு வர்ஷ சராசரி ... | 8,98,000 டன் | 2,40,800 டன் |
| | ii. 1913-ல் கட்டப்பட்டவை ... | 22,03,000 டன் | 6,18,800 டன் |
| 6 | ஸூயஸ் கால்வாய் வழியாய் நடந்த வ்யாபாரம்: அதன் வழியாய்போன கப்பல்களின் மொத்த நிறை ... | மொத்தக்கப்பல்களின் நிறையில் நூற்றுக்கு 62·9 | மொத்தக் கப்பல்களின் நிறையில் நூற்றுக்கு 15·1 |
| 7 | ரெயில்வேக்கள்— 1888-ம் வர்ஷத்தில் கிடைத்த ரெயில்வே வரும்படியைவிட 1910-ம் வர்ஷத்தில் நூற்றுக்கு எவ்வளவு வீதம் அதிகம் ... | 74·3 | 156 |

| நம்பர். | அம்சம். | இங்க்லண்ட். | ஜெர்மனி. |
|---|---|---|---|
| 8 | 1911-ம் ஹு த்தில் உள்நாட்டுக் கால்வாய்களின் நீளம் ... | 8,180 | 15,320 |
| 9 | 1888-லிருந்த அன்யநாட்டுவ்யாபாரம் 1912-ல் 100-க்கு எவ்வளவு வீதம் அதிகம் ... | 100·7 | 204 |
| 10 | ப்ரிட்டிஷ் ராஜ்யத்திலிருந்து ஜெர்மனிக்குப் போகும் இறக்குமதி மொத்தத்தில் நூற்றுக்கு 18-பாகம் | | |
| 11 | ஜெர்மனியிலிருந்து ப்ரிட்டிஷ் ராஜ்யத்துக்குப் போகும் ஏற்றுமதி மொத்தத்தில் 100-க்கு 17 பாகம் ... | | |
| 12 | தேசத்தின் ஐச்வர்யம் ... | 24,750 கோடி ரூ. | 22,500 கோடி ரூ. |
| 13 | தேச வரும்படி ... | 3,180 கோடி ரூ. | 3,000 கோடி ரூ. |
| 14 | 1912-ல் ராணுவத்துக்கும் கப்பல் படைக்கும் செலவு ... | தேச ஐச்வர்யத்தில் 100 ரூ-க்கு 7 அணு வீதம் | தேச ஐச்வர்யத்தில் 100-ரூ-க்கு 7½ அணு வீதம் |
| | | தேச வரும்படியில் 100 ரூ-க்கு 3-ரூ 6-அ. வீதம். | தேச வரும்படியில் 100 ரூ க்கு 3½ரூ வீதம் |
| 15 | இறக்குமதியைவிட ஏற்றுமதி எவ்வளவு அதிகம் (1912-ல்) ... | 2,18,51,85,000 ரூ. | 130,40,25,000 ரூ |
| | இறக்குமதியைவிட ஏற்றுமதி எவ்வளவு அதிகம் (1888-ல்) ... | 133,65,00,000 ரூ. | 4,26,75,000 |
| 16 | வெளியில் வட்டிக்கு விடுவது ... | தேசஐச்வர்யத்தில் நூற்றுக்கு 23. | தேச ஐச்வர்யத்தில் 100-க்கு 6·6 |
| | உள்நாட்டிலேயே கடனுக்கு விட்டிருப்பது ... | 67,50,00,000 ரூ. | 206,25,00,000 ரூ |
| | வெளிதேசங்களில் கடனுக்கு விட்டிருப்பது ... | 247,50,00,000 | 20,25,00,000 |
| 17 | ஸர்க்கார்கடன் ... | ஜனத்தொகையில் தலைக்கு 247½ ரூ. வீதம் | ஜனத்தொகையில் தலைக்கு 230 ரூ வீதம் |
| 18 | 1912-ல் கோதுமை, கால்நடை, பன்றி, பால் முதலிய பல விவஸாய விளைவு பொருள்களின் மதிப்பு. ... | 270,22,03,500 ரூ. | 716,25,00,000 ரூ |
| 19 | ஆட்டுரோமநெசவு: 1912-ல் ஏற்றுமதி ... | 56,65,95,000 ரூ. | 25,32,00,000 ரூ |
| 20 | ஜனத்தொகை 1910-ம் ஹு கணக்கு ... | | 6,49,25,000 |
| | 1911 ,, ,, ... | 4,52,16,000 | |

1-வது அம்சமாகிய நிலக்கரி வெட்டி எடுப்பதில் இங்க்லண்டைவிட ஜெர்மனி ரொம்பவும் முன்னேறியிருக்கிறதென்று தெரிகிறது. மூன்றுவது அம்சமாகிய பருத்தித்தொழிலிலும், 19-வது அம்சமாகிய கம்பளித்தொழிலிலும், ஜெர்மனிதேசம் இங்க்லண்டைவிட ரொம்பவும் தாழ்ந்த ஸ்திதியிலிருக்கிறது.

4-வது அம்சமாகிய வ்யாபாரக்கப்பல் விஷயத்தில் சென்ற 30 வர்ஷகாலத்தில் ஜெர்மனியின் அபிவ்ருத்தியானது இங்க்லண்டினுடைய அபிவ்ருத்தியைக் காட்டிலும் இரண்டு பங்குக்கு மேற்பட்டிருக்கிறதென்றாலும், மொத்தத்தில் இங்க்லீஷ் கப்பல்களின் மொத்த நிறையளவு ஜெர்மனியின் கப்பல்கள் நிறையளவைவிட இருபது லக்ஷம் டன் அதிகமாக இருக்கிறது. தவிர முன் காலத்தில் கப்பல்கள் காற்றின் உதவியால் ஓட இப்பொழுது நீராவி விசையால் ஓடுவதோடு வேறு விதங்களிலும் சீர்திருத்தப்பட் டிருக்கின்றன. ஜெர்மனி இதர தேசங்களுக்கு அனுப்பும் ஸாமான்கள் இங்க்லீஷ் கப்பல்களில் அனுப்பப்படுவதால், இங்க்லீஷ் கப்பல்கள் ஜாஸ்தியாக அதிகமாகியிருக்கின்றன. 6-வது அம்சமாகிய ஸூயெஸ் கால்வாய் வழியாய் நடக்கும் வ்யாபாரத்தைப்பார்க்கும்பொழுது, வெகு காலத்துக்கு முன்னால் ஏற்பட்டபடியே இங்க்லண்ட் முன்னேற்றம் பெற்றிருக்கிறதென்று தெரியவரும். 7-வது அம்சமாகிய ரயில்பாதைகளைப்பற்றி கவனிக்க வேண்டிய முக்ய விஷயமென்ன வென்றால், ஜெர்மனியில் அவைகளைக்கொண்டு ஷேர் ஹோல்டர்கள் லாபமடித்து விடாமல் கவர்ன் மெண்டாரே தங்கள் ஸொந்தத்தில் வைத்துக்கொண்டு பொது ஜனங்களின் நன்மைக்காகவே நடத்திக்கொண்டு வருகிறார்கள். ஜெர்மன் ராஜ்யத்தின் மொத்த வரும்படியில், ரயில்வேயிலிருந்து வரும் வரும்படியானது 100-ல் 34 ஆகிறது.

9-வது அம்சம் இங்க்லண்ட் ஜெர்மனி இவைகளுடைய அன்யதேச வ்யாபாரங்களைப் பற்றியது. இதில் சென்ற 25 வர்ஷத்தில் ஜெர்மனியின் அன்யதேச வ்யாபாரம் இங்க்லண்டின் வ்யாபாரத்தைவிட இரண்டு பங்கு அதிகரித்திருக்கிறது. இதற்குக்காரணம் ஜெர்மனி கைத்தொழில்களில் வெகு விரைவாய் முன்னேறியிருப்பதே. ஜெர்மனியின் ஏற்றுமதி இறக்குமதி சரக்குகளை ஆராய்ச்சி செய்த ஒருவர் இன்னம் 10 வர்ஷத்தில், ஜெர்மனி ஒன்றே செய்யக்கூடிய ஸாமான்கள் இங்க்லண்டே செய்யக்கூடிய ஸாமான்களைவிட மொத்த மதிப்பில் ரொம்ப ஆகிவிடுமென்றார். ஆனால் இங்க்லண்ட் செய்யும் வ்யாபாரத்தில் சரக்குகள் வெளிதேசங்களிலிருந்து இங்க்லண்டுக்கு வந்து, அங்கிருந்து வேறு தேசங்களுக்கு ஏராளமாய் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இந்தவ்யாபாரத்தையும் சேர்த்து ஒத்துப்பார்க்கும் பக்ஷத்தில் ஜெர்மனியின் மொத்த வ்யாபாரம் இங்க்லண்டின் மொத்த வ்யாபாரத்தை எட்ட வெகுகாலம் பிடிக்கும். ஜெர்மனி கைத்தொழில்களில் இவ்வளவு விரைவாய் முன்னேறியிருப்பதற்கு ஒரு முக்யகாரணத்தை இங்கே குறிப்பிடுவது உசிதமாகும். இங்க்லீஷ் பாங்கிகளைப் போலல்லாமல் ஜெர்மன் பாங்கிகள், கைத்தொழில்கள் செய்யும் ஜாயிண்ட் ஸ்டாக் அதாவது கூட்டுச்சேர்த்து நடக்கும் கம்பெனிகளுக்குப்பணம் தாராளமாய்க் கடன் கொடுப்பதோடு, அவைகளுக்கு மூலதனம் சேர்ப்பதில் வஸதிகள் செய்து கொடுக்கின்றன.

இங்க்லண்டுக்கும் ஜெர்மனிக்கும் உள்ள வ்யாபாரத்தை கவனித்துப் பார்த்தால் வெளிதேசங்களிலிருந்து ஜெர்மனியில் இறக்குமதியாகும் சரக்குகளின் மொத்தத்தில் 100-ல் 18 பாகம் இங்க்லண்டிலிருந்து வருகிறது. ஜெர்மனி இங்க்லண்டுக்கு ஏற்றுமதி செய்வதிலும், அதன் மொத்த வ்யாபாரத்தில் 100-க்கு 17·7

பாகம் இங்க்லண்டுக்குப் போகிறது. ஆகை யால் ஜெர்மனிக்கும் இங்க்லண்டுக்கும் நடக் கும் பரஸ்பர வ்யாபாரம் ஒன்றுக்கொன்று குறைவில்லையென்று தோன்றினாலும், இரண் டிற்கும் ஒரு பெரிய வித்யாஸமிருக்கிறது. ஜெர் மனிக்கும் இங்க்லண்டல்லாத இதர தேசங் களுக்கும் நடக்கும் வ்யாபாரம், ஒவ்வொரு தேசத்தையும் எடுத்துப்பார்த்தால், இங்க்லண் டோடு ஏற்பட்டுள்ள 100-க்கு 18 வீதம் போ லில்லாமல் விகிதம் ரொம்ப குறைவாயிருக் கிறது. இங்க்லண்டின் ஏற்றுமதியோ இதர பிரிட்டிஷ் நாடுகளுக்கு மொத்த வ்யாபாரத் தில் 100-க்கு 36 பாகமாகவும், இறக்குமதி 100-க்கு 20 பாகமாகவுமிருக்கின்றன. ஆகை யால் பரஸ்பர வ்யாபாரத்தில் இங்க்லண்ட் ஜெர் மனிக்கு எவ்வளவு அவச்யமோ அவ்வளவு ஜெர்மனி இங்க்லண்டுக்கு அவச்யமல்ல. இங்க் லண்டின் வ்யாபாரம் பெரும்பாகம் ஒரே தே சத்தோடு இல்லாமல் உலகத்திலுள்ள பலதே சங்களோடும் நடக்கிறது. இங்க்லீஷ் ஸா மான்களை ஜெர்மனி வாங்குவது அதிகமென் றாலும் இருதேசங்களுக்குமுள்ள பரஸ்பர வ்யாபாரம் நின்றுபோனால் ஜெர்மனி எவ்வளவு கஷ்டப்படுமோ அவ்வளவு இங்க்லண்ட் கஷ் டப்படாது. இங்க்லீஷ் குடியேற்ற நாடு களோடு ஜெர்மனி செய்யும் வ்யாபாரம் மொத் தத்தில் ஜாஸ்திதான். ஆகவே அவைகளோடு இங்க்லண்டுசெய்யும் வ்யாபாரம் அவைகளோடு ஜெர்மனி செய்யும் ஏற்றுமதி இறக்குமதி வ்யாபாரத்தைப் பொறுத்திருக்கிறது. இங்க் லண்டிலிருந்தும் இங்க்லண்டின் குடியேற்ற நாடுகளிலிருந்தும் ஜெர்மனிக்கு ஏற்றுமதி செய்யப்படும் சரக்குகள் ஜெர்மனியில் கைத் தொழில்களுக்கு உபயோகப்படக்கூடிய விளை பொருள்களும் பாதி பக்வம் செய்யப்பட்ட பொருள்களுமாகும். ஜெர்மனியிலிருந்து ஏற்று மதி செய்யப்படும் சரக்குகளோ முக்யமாய் கைத்தொழில் சரக்குகளே. நவீன கைத்தொ ழில்களுக்கு வேண்டிய மின்ஸார யந்த்ரங்கள், சுரங்கம் வெட்டி யெடுப்பதற்கு வேண்டிய யந்த்ரங்கள் முதலியவைகள் இங்க்லண்டுக்கு ஜெர்மனியிலிருந்தே வந்து சேரவேண்டும்.

இங்க்லீஷ்காரர்களே சைனு, ஆஸ்ட்ரேலியா, சிலி, கனடா, இந்தியா முதலிய பல தேசங் களுக்குப்பணம் கடன் கொடுக்கிறார்கள். இந்தப் பணத்தைக் கொண்டுதான் மேற் சொன்ன தேசத்திலுள்ள வ்யாபாரிகள் இங்க் லண்டில் கிடைக்காத ஸாமான்களை ஜெர் மனியிலிருந்து வாங்குகிறார்கள். இது ஜெர் மனிக்கு ஒரு பெரிய அனுகூலந்தான். ஏனென் றால் ஜெர்மானியர்கள் தங்கள் பணத்தை தங் கள் தேசத்திலே போட்டு கைத்தொழில்களை ரொம்பவும் வ்ருத்திசெய்து விட்டார்கள். சாப் பாட்டுக்குவேண்டிய உணவுபொருள்களையும் கைத்தொழில்களுக்கு வேண்டிய பொருள்க ளையும் இங்க்லீஷ்காரரைச் சேர்ந்த இதரநாடு களிலிருந்து வரவழைத்துக்கொண்டு அவை களுக்கு பதிலாக தங்கள் கைத்தொழில் சரக்குகளைக் கொடுத்து உலகமெங்கும் தங் கள் வ்யாபாரத்தை பலப்படுத்தி விட்டார்கள். இதனால் 15 வர்ஷங்களுக்கு முன் போலில்லா மல் ஜெர்மனி வ்யாபாரத்துக்கு ஒரு தேசத் தையே நம்பியிராமல் உலகத்தில் பலதேசங் களோடு பத்து வரவு செய்கிறது. இங்க்லண் டின் மொத்த ஐச்வர்யம் 24,750 கோடி ரூபா யென்றும் ஜெர்மனியின் மொத்த ஐச்வர்யம் 22500 கோடி ரூ. என்றும் மதிக்கப்படுகின் றன. இவைகளைத் தலை வீதமாகப்போடும் பக்ஷத்தில் இங்க்லண்டில் 247½ ரூபா வீதமும், ஜெர்மனியில் 230 ரூபா வீதமுமாகிறது.

சென்ற 16 வர்ஷங்களுக்குள் ஜெர்மனியின் மொத்த வரும்படி 1392½ கோடி ரூபா அதி கப்பட்டிருக்கிறது. அதாவது 650 லக்ஷம் ஜெர்மனியர்களுக்கு தலை வீதமாய்ப்போடும் பக்ஷத்தில், தலைக்கு 307½ ரூபாயிலிருந்து 450 ரூபாயாக அதிகரித்திருக்கிறது. இந்த அதிக

வரும்படியில் 3-ல் ஒன்று ஜனபிவ்ருத்தியினால் ஆனதென்றும், பாக்கி 3-ல் 2-பாகம் சராசரியில் ஒவ்வொரு ஜெர்மானியரும் அதிகமாக ஸம்பாதித்ததென்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது.

மேற் சொன்ன காலத்தில் இங்க்லண்டின் வரும்படி 1065 கோடி ரூபா அதிகமாயிருக்கிறது. அதாவது 540 ரூபாயிலிருந்து 705 ரூபாயாக ஆயிருக்கிறது. இதில் 7-ல் இரண்டு பாகம் ஜன ஸங்க்யை அதிகரித்ததனால் ஏற்பட்டது என்று தெரிகிறது. இங்க்லண்டையும் அதன் ஆதீனத்துக்குள்பட்ட குடியேற்ற நாடுகளையும் தேசங்களையும் சேர்த்துக் கணக்குப்போட்டால், அவைகளின் மொத்த வரும்படி ஜெர்மனியினுடையவும் அதன் ஆதீனத்துக்குள்பட்ட தேசங்களுடையவும் மொத்த வரும்படியைவிட 5,250 கோடி ரூபாய் அதிக மென்றும், ஜெர்மனியின் ஏகாதிபத்யத்தைவிட இங்க்லீஷ் ஏகாதிபத்யத்தின் ஐச்வர்யம் 15000 கோடி ரூபாய் அதிகமென்றும் தெரிகிறது.

15-வது அம்சமாகிய அன்யதேச வ்யாபாரத்தால் இங்க்லண்டுக்கும் ஜெர்மனிக்கும் அன்ய தேசத்தார்கள் வ்யாபாரக் கணக்குப் பைஸலில் எவ்வளவு கொடுக்கிறார்களென்று தெரியவரும். உலகத்தில் வ்யாபாரத்தில் இங்க்லண்டுக்கே ஜாஸ்தியாக வெளிதேசத்தார்கள் பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது. 1888-ம் வர்ஷத்தில் எங்கேயோ கீழேகிடந்தஜெர்மனி இப்பொழுது இங்க்லண்டுக்கு 2-வது ஆகி அன்யதேச வ்யாபாரத்தில் பணம் ஸம்பாதிக்கிறது.

16-வது அம்சமாகிய முதல் போட்டு லாபம் ஸம்பாதிக்கும் விதத்தைப்பார்த்தால், ஜெர்மானியர் ஸ்வதேசத்திலும் இங்க்லீஷ்காரர்கள் வேறு தேசங்களிலும் தங்கள் பணத்தை வட்டிக்கு விடுகிறார்களென்று தெரிகிறது.

ஜெர்மனி காப்புவரி அதாவது இதரதேசங்களிலிருந்து வரும் சரக்குகளின்மேல் வரி போடும் தேசம். இப்படி வரிவிதித்து இதர தொழில்களைவிட விவஸாயத் தொழிலுக்கு அதிக உதவி செய்கிறது. விவஸாயத் தொழிலுக்கு வரி குறைச்சலாய் போட்டும்விவஸாயப் பொருள்களை ரயிலில் கொண்டுபோக சார்ஜ் குறைச்சலாய் செய்தும் இப்படிப் பலவிதமாக விவஸாயத்திற்கு உதவி செய்கிறது. இதனால் விவஸாயத்தில் வரும் வரும்படி அதிகமாகி நிலத்தின் விலைவும் அதிகமாயிருக்கிறது. இப்படி ஸாக்கார் உதவி செய்வதால் ஜெர்மன் விவஸாயிகள் தலைகொழுத்துப்போய் சும்மா இருப்பதில்லை. நிலங்களை எவ்வளவு திறமாய் எத்தனை தடவை ஸாகுபடி செய்யலாமோ அவ்வளவும் செய்வதால் ஜெர்மனி உலகத்திலுள்ள முக்ய விவஸாய தேசங்களில் ஒன்றாயிருக்கிறது.உலகத்தில் உருளைக்கிழங்கின் மொத்தவிளைவு ஜெர்மனியில் தான் அதிகம், கோதுமை, வால்கோதுமை, ரை என்னும் தான்யம் இவைகளின்விளைவில்உலகத்தில்வேறுஇரண்டு தேசங்கள் தான் ஜெர்மனிக்கு முந்தியிருக்கின்றன. இவ்வளவு திறமாய் விவஸாயம் செய்தும் ஜெர்மனியிலுள்ள ஜனங்களுக்கு ஆகாரப் பொருள்கள் போதாமல், இதர தேசங்களிலிருந்து அவைகள் ஏராளமாய் இறக்குமதி செய்யப்படுகின்றன. இங்க்லண்டில் விவஸாயத்துக்கு கவர்ன்மெண்டார் செய்வது ஜெர்மனி செய்வதற்கு நேர்விரோதம். இப்படி விவஸாயத்தைப் பராமரிக்காததனால் இங்க்லண்டில் நிலத்தின் விலை குறைந்து போயிருக்கிறது. இருந்த போதிலும் இங்க்லண்டில் ஜனங்களில் பெரும்பாகத்தார் விவஸாயத்தையே முக்யதொழிலாகக் கொண்டாடுகிறார்கள். அந்த தேசத்திற்கு வேண்டிய ஆகாரப் பொருள்கள் பாதிக்கு மேல் அங்கேயே விளைகின்றன.

உலகத்திலுள்ள தேசங்களில் இங்க்லண்டே இதர தேசங்களுக்கு பணம் கொடுத்து உதவும் தேசம். இப்படி இங்க்லண்டு பணம் கொடுத்து உதவுவதனல்தான் இதர தேசங்களில் ஆகாரப் பொருள்களும் கைத் தொழிலுக்கு வேண்டிய பொருள்களும் விளைவிக்கப்படுகின்றன. இன்னம் போகப்போக இங்க்லண்ட்,ஜெர்மனி, அமெரிக்க ஐக்யமாகாணங்கள் போன்ற தேசங்களுக்கு ஆகாரப்பொருள்களும் கைத்தொழிலுக்கு வேண்டிய பொருள்களும் ஏராளமாய் வேண்டியிருக்குமாதலால் அவைகள் ரொம்ப க்ராக்கியாயிருக்கும். இப்பொழுது இங்க்லண்டுக்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் நடப்பதால் இங்க்லீஷ்காரர்கள் இனிமேல் கொஞ்ச காலத்திற்கு அவர்களுடைய பணத்தை அன்ய தேசத்திற்கு அனுப்பமாட்டார்கள். அதனல் எல்லா தேசங்களிலும் பணவஸதி குறைந்து அவைகள் அன்யதேசங்களிலிருந்து சரக்குகள் வாங்குவதும் குறையும். ஆகையால் இப்பொழுது ஜெர்மனி அன்யதேசங்களோடு செய்யும் வ்யாபாரத்தைக் குறையாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமானல், அந்த தேசங்களுக்கு ஜெர்மனி சரக்குகளை வாங்க பணவஸதிகள் செய்து கொடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் இது வரையில் செய்து வந்தது போல் ஜெர்மானியர் தங்களுடைய தேசத்திலேயே பணத்தை உபயோகப்படுத்தாமல் வெளி தேசங்களுக்கு அனுப்பும்படி வரும். அதனல் ஸ்வதேசத்தில் பணத்தட்டு ஏற்படும் அதனல் அங்குள்ள கைத்தொழில்கள் செழித்தோங்குவதற்கு தடை யேற்படும்.

## THE ORGANISATION OF THE NAVY.

### கப்பல் படையின் அமைப்பு.

யுத்தக் கப்பல்கள் எல்லாம் ஒரே மாதிரியல்ல. அவைகளில் பலவிதமானவைகள் இருக்கின்றன. ரொம்ப சக்தியுள்ளனவாயும் பெரியவையாயும் இருக்கிற போர்க்கப்பல்கள் முதல், சின்னவையான டார்பிடோ போட் வரையில் வெவ்வேறு அளவில் எத்தனையோ மாதிரியான யுத்தக் கப்பல்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அவைகளில் முக்யமானவை பின் வருமாறு:—

1. 'பாட்டில் ஷிப்'என்று சொல்லப்படும் யுத்தக் கப்பல்கள்.
2. 'பாட்டில் க்ரூஸர்' என்று சொல்லப்படும் யுத்தக் க்ரூஸர்கள்.
3. க்ரூஸர்கள்.
4. டிஸ்ட்ராயர்கள்.
5. டார்பிடோ போட்டுகள்.
6. ஸப்மரீன் கப்பல்கள்.

இவைகளைத் தவிர, சுரங்கமிடும் கப்பல்களும், கப்பல்களுக்கு சேதம் நேர்ந்தால், அவைகளை ரிபேர் செய்யவேண்டியதற்குரிய ஸாமான்களை கொண்டு போகும் கப்பல்களும் இருக்கின்றன. ஆனல், மேல்சொன்னவைகளில் முக்யமானவை யுத்தக் கப்பல்களும், யுத்த க்ரூஸர்களுந்தான். மற்ற விதமான கப்பல்களின் உபயோகம் மேற்சொன்ன இரண்டு வகைகளையும் நாசப்படுத்துவதே.

தற்போதைப்போலல்லாமல் பழைய காலத்தில், நீராவியின் சக்தியினல் ஓடாமல் கப்பல்களெல்லாம் காற்றின் விசையினல்தான் ஒரு இடத்திலிருந்து வேறு இடங்களுக்கு ப்ரயாணம் போயின. இப்பொழுதோ, சாஸ்த்ர நிபுணர்களின் புத்தி வல்லமையினல் அநேக கப்பல்கள் நீராவியின் விசையினல் ஓடுகின்றன. ஒவ்வொன்றிலும் மூன்று நான்கு மாடிகள் வைத்த ப்ரமாண்ட கப்பல்களும் கட்டப்பட்டிருக்கின்றன. முன் காலத்து யுத்தக்

கப்பல்களில், ஸாதாரணமாய் ஒரே அளவுள்ள பீரங்கிகளைத்தான் யுத்தத்திற்கு கொண்டுபோவார்கள். ஆனதினாலே, கப்பல்கள் சின்னவையானாலும் பெரியவையானாலும், எல்லாக் கப்பல்களும், எதிரிக் கப்பல்கள் நெருங்கி வந்தால், ஒரே விதமாய்த் தான் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளக்கூடும். சத்ருக்களின் கப்பல்களை மிகவும் பலமாய் எதிர்க்கவேண்டுமானால், அதற்கு ஒரே வழிதான் இருந்தது. அதாவது, கப்பலில் அநேகம் பீரங்கிகளையேற்றி அவைகளின் உதவியினால் எதிரிக் கப்பல்களைச் சுடுவதே.

**Dreadnought.**

ட்ரேட்னாட்

பிற்பாடு வரவர பீரங்கிகளை அதிகமாக ஏற்றிக்கொண்டு போகாமல் பீரங்கிகளின் வாய்கள் ரொம்ப அகலமாயிருக்கும் பல பீரங்கிகளைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு போய்ச் சண்டை செய்தார்கள். நாகரீகமும், புதிது புதிதாய்க் கண்டுபிடித்த நூதன சக்திகளும் நிறைந்த இக்காலத்தில், பலமான போர்க் கப்பல்கள் செய்வது இம்மாதிரியல்ல. கணக்கில்லாமல், ஒரே கப்பலில் அநேகம் பீரங்கிகளை உபயோகப் படுத்துவதைப்பார்க்க, விரைவாய் வெகு சக்தியுடன் சுடக்கூடிய கொஞ்சம் பீரங்கிகளை வைக்க ஆரம்பித்தார்கள். இவ்விதம் முதல் முதலாய்ச் செய்த கப்பலின் பெயர் 'ட்ரெட்னாட்'. முதலில் செய்த ட்ரெட்னாட்டைக் காட்டிலும் பலமான யுத்தக் கப்பல்கள் எத்தனையோ இப்பொழுது செய்திருக்கிறார்கள். பெரிய யுத்தக் கப்பல்களை ட்ரெட்னாட் என்றே சொல்லுகிறார்கள்.

யுத்தக் கப்பல்களின் அமைப்பு.

போர் கப்பல், போர் க்ரூஸர்—இவைகள் என்னத்திற்கென்றால், நிறைய பீரங்கிகளைச் சுமந்து கடலில் போய் எதிரியின் யுத்தக் கப்பல்களைத் தாக்கவே. ஆகையினால், ஒரு யுத்தக் கப்பல் எவ்வளவுக் கெவ்வளவு பலமான பீரங்கிகளை சுமந்து மிதக்குமோ, அது தான் மிக பலமான கப்பல். யுத்தக் கப்பலை ஸாதாரணமாய் மிதக்கும் பலமான கோட்டை யென்றே சொல்லலாம். அந்தக் கப்பலின் பக்கங்களெல்லாம் குண்டினால் நாசமடையாமலிருக்க இரும்புக் கவசம் போடப்பட்டிருக்கும். கவசம் 14 அங்குலம் வரையில் கனமுள்ளதாயிருக்கும். ஒவ்வொரு பீரங்கி இருக்கும் இடமும் ஒரு சிறிய கோட்டைபோலிருக்கும் அந்த பீரங்கிக்கு வேண்டிய வெடி மருந்துகளும், ஸாமான்களும் அதன் கீழே அமைந்த அறைகளில் வைக்கப்பட்டிருக்கும்.

போர்க் கப்பல்கள் யுத்தத்திற்கு போகும் பொழுது பத்தியாயோ அல்லது ஒன்றின் பின் ஒன்றாயோ எப்பொழுதும் கூட்டமாகவே போகும். அந்தக் கூட்டத்தில், ப்ரதானமான கப்பலின் கொடிமரத்தில் அதன் தலைவர் இன்ன அந்தஸ்துள்ளவர் என்பதைக் காட்டும் அடையாளமுள்ள கொடி பறக்கும்.

டார்பிடோ ட்யூப்கள் வந்து கப்பலின் பக்கத்தில் மோதினால், கப்பல் உடைந்து சிதறிப்போகும். இவ்விதமான ட்யூப்கள் கிட்ட வருவதைப் பார்த்தால், தக்ஷணமே அவைகளைப் பிடிக்க ஆற்றுமுடைசலுக்குப் போடும் குதிரை மரங்கள் போன்ற சில கருவிகளை கப்பலின் பக்கத்தில் விட்டுவிடுவார்கள். விட்டவுடன் டார்பிடோ ட்யூப்கள் அவைகளுக்குள் சிக்கிக்கொண்டு வெடித்து கப்பலுக்கு ஒரு சேதமும் நேராது.

# THE TURKISH ARMY.

## துருக்கியின் ஸைன்யம்.

துருக்கியிலுள்ள எல்லா ஆண்களும் ராணுவத்தில் சேரக்கடமைப் பட்டவர்கள். 1908-ம் வர்ஷத்துக்கு முன்னுல் கிரிஸ்தவர்களே ராணுவத்தில் சேர்த்துக் கொள்ளாமலிருந்தார்கள். அந்த வர்ஷத்தில் கிரிஸ்தவர்களேயும் ராணுவத்தில் சேர்த்துக் கொள்வதற்காக கவர்ன்மெண்டார் சட்டம் செய்தார்கள்.

வாலிபர்கள் தங்களுடைய 20-வது வயஸில் ராணுவத்தில் சேருகிருர்கள். முதலில் மூன்று வர்ஷம் பட்டாளங்களில் சேர்ந்திருப்பார்கள். அதற்குப் பிறகு 6-வர்ஷம் ஸைன்யத்தைச் சேர்ந்த முதல் 'ரிஸர்வ்' ஸைன்யமாக இருப்பார்கள். பட்டாளத்தில் உள்ள ஸோல்ஜர்களும் அவர்களேச்சேர்ந்த முதல் ரிஸர்வும் சேர்ந்து ஆக்டிவ் ஆர்மி அதாவது யுத்தத்துக்குத் தயாராக இருக்கும் ஸைன்யமென்று சொல்லப்படும். இதற்கு முதல் 'லைன்' ஸைன்யமென்றும் சொல்வதுண்டு. துருக்கியில் இதற்கு 'நிஜாம்' என்றுபெயர்.

ஸோல்ஜர்கள் முதல் 'லைன்' ஸைன்யத்தைச் சேர்ந்து 9-வர்ஷமான பிறகு, 'ரெடிப்' என்ற இரண்டாவது 'லைன்' ஆர்மியென்று சொல்லப்படும் இரண்டாவது ரிஸர்வ் ஸைன்யத்தைச் சேர்ந்தவர்களாகிருர்கள். அதற்குப் பிறகு 'முஸ்டாபிஸ்' என்று சொல்லப்படும் மூன்ருவது 'ரிஸர்வ்' அல்லது மூன்ருவது 'லைன்' ஸைன்யத்தைச் சேர்ந்தவர்களாகிருர்கள். ஆகமொத்தம் 20-வர்ஷம் ராணுவத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிருர்கள்.

'ரிஸர்வ்' ஸைன்யத்தைச் சேர்ந்தவர்கள் வர்ஷத்துக்கு ஒரு தடவை ஒரு குறிப்பிட்டகாலம் ராணுவப் பயிற்சி யடைவதற்குக் கூப்பிட்டால் போகத் தயாரா யிருக்கவேண்டும்.

யுத்தத்துக்குத் தயாராயிருக்கும் ஸைன்யமாகிய 'நிஜாம்' பிரிவில்தான் காலாள்படை, குதிரைப்படை, பீரங்கிப்படை ஆகிய மூன்று வகை ஸைன்யங்கள் இருக்கின்றன. இரண்டாவது மூன்ருவது ரிஸர்வுகளாகிய 'ரெடிபி'லும், முஸ்டாபி'ஸிலும் காலாள்படை மாத்ரந்தான் உண்டு. முதல் பிரிவில் யுத்தத்துக்கு வேண்டியிருப்பது போக பாக்கி ஏதாவது குதிரைகளும் பீரங்கிகளும் இருந்தால்,அவைகளே இந்த ரிஸர்வுகளுக்கு கொடுப்பார்கள்.

ஏஷியா மைனர் என்னும் பிரிவில் அரபியர்களேயும் குர்ட் ஜாதியார்களேயும் சேர்த்து குதிரைப்படை ஸைன்யம் தயார் செய்து வைத்திருக்கிருர்கள். இந்த குதிரைப்படை ஸைன்யத்தில் 24 ரெஜிமெண்டுகள் இருக்கின்றன.

மேற்சொன்ன ஸைன்யங்களேத்தவிர 'ஸாண்டேர்மரி' என்று சொல்லப்படும் ஒரு ஸைன்யம் இருக்கிறது.

ஸமாதான காலத்தில் துருக்கிக்கு உள்ள ஸைன்யத்தின் மதிப்பு 2,30,000 ஸோல்ஜர்கள். யுத்தகாலத்தில் 5-லக்ஷம் ஸோல்ஜர்கள் கிடைக்கலாமென்று சொல்லப்படுகிறது.

---

## INDIAN RAILWAYS.

## இந்துதேசத்திய இருப்புப்பாதைகள்.

1913-14 வர்ஷம் கடைசிவரையில் நமது தேசத்தில் ஏற்கனவே கட்டப்பட்டு ப்ரயாணிகளுக்கு உபயோகப்பட்டு வரும் இருப்புப் பாதைகளுக்காக 440,15,43,000 ரூபாயும், இவ்வர்ஷத்தில் புதிதாய்க் கட்டப்பட்டு வருகிற பாதைகளுக்காக 7,68,53,000 ரூபாயும் மூலத்ரவியம் செலவழிந்திருக்கிறது.

மேற்கண்ட வர்ஷத்தில் மாத்ரம் செலவாயிருப்பது கட்டிடங்கள் முதலியவைக்காக 9,29,00,000ரூபாயும், இஞ்ஜின்கள், வண்டிகள் ஆகிய இவைகளுக்காக 7,31,00,000 ரூபாயும், புதிய பாதைகள் கட்டுவதற்காக 1,86,00,000 ரூபாயும் ஆகமொத்தம் 18,46,00,000 ரூபாய்.

இருப்புப் பாதைகள் மூலமாய் மொத்த வருமானம் ரூ. 63,48,56,000. செலவு போக மீதியிருந்தது ரூ 30,65,52,000. ஆகவே மூலதனத்தின்மேல் 100-க்கு 6.15-வீதம் வட்டியாகிறது.

23,00,00,000 ப்ரயாணிகளும், 5,00,00,000 டன் நிறையுள்ள ஸாமான்களும் இருப்புப் பாதை மார்க்கமாய் சென்றிருக்கின்றன. இவற்றினால் முறையே 22,00,00,000 ரூபாயும், 38,00,00,000 ரூபாயும் வருமானம் ஏற்பட்டன.

இந்த வர்ஷத்தில் இந்தியாவில் 1053·47 மைல் நீளம் இருப்புப்பாதை புதிதாகப் போடப்பட்டது. இதைச் சேர்க்க நம் தேசத்தில் உள்ள இருப்புப்பாதைகளின் நீளம் 34,656 மைல் ஆகிறது. இதைத் தவிர மேற்படி வர்ஷத்தில் 953·59 மைல் நீளம் பாதைபோட கவர்ன்மெண்டார் உத்தரவு கொடுத்திருக்கிறார்கள். 1904-ம் வர்ஷம் இருந்ததையும் இப்பொழுது இருப்பதையும் கவனித்து பார்த்தால் சென்ற 10-வர்ஷத்தில் இருப்புப்பாதை கட்டுவதில் நம்தேசம் எவ்வளவு வ்ருத்தியடைந்து இருக்கிறதென்பது தெரியவரும். அதன் கணக்குகள் பின் வருமாறு.

| | | 1904 | 1914 |
|---|---|---|---|
| | | மைல் | மைல் |
| 5 அடி 6 அங்குலம் அகலமுள்ள பாதைகள் | ... | 14,733 | 17,641 |
| 3 „ 3⅜ „ „ | ... | 11,562 | 14,389 |
| 2 „ 6 „ „ | ... | 942 | 2,174 |
| 2 „ „ „ | ... | 328 | 452 |
| ஆக | ... | 27,565 | 34,656 |
| அதிகம் | ... | 7,091 | |

இந்திய இருப்புப்பாதைகளில் மேற்கூறிய ஒரு வர்ஷத்தில் (1913-14) தற்செயலாய் நேர்ந்த ஆபத்துகளால் ரயில்வே வேலையாட்கள் 480 பேரும், ப்ரயாணிகள் 268 பேரும் பாதையில் உத்தரவின்றி நடத்தல், தற்கொலை முதலிய காரணங்களால் 1590 பேரும் இறந்தார்கள். இது தவிர 845 வேலையாட்களும் 815 ப்ரயாணிகளும் 482 இதர ஜனங்களும் காய மடைந்தார்கள். ஆக மொத்தம் 2338 ஜனங்கள் கொலை யுண்டார்கள்; 2,142 பேர் காயமடைந்தார்கள். இது மிகவும் அதிகமாகத்தான் காணப்படுகிறது. ஆயினும் பாதையின் நீளம் 34,656 மைல் என்று காணும் போது, ஆபத்துகளின் ஸங்க்யை மிகக் குறைவென்றுதான் த்ருப்தி யடையவேண்டும்.

சென்னை ராஜதானியிலுள்ள பாதைகளைப் பற்றி நாம் முக்யமாய் கவனிக்கவேண்டியதாகையால், இந்த ராஜதானியில் சென்ற வர்ஷம் புதிதாய் கட்டப்பட்ட சில பாதைகளைப் பற்றியும், மைஸூர் திருவாங்கூர் ராஜ்யங்களில் புதிதாய்க் கட்டி முடிவுக்கு வந்துகொண்டிருக்கிற பாதைகளைப் பற்றியும் சுருக்கமாய்ச் சொல்லுவோம்,

### பாம்பன் ரயில்வே வாராவதி.

இப்பாதை தென்னிந்தியா ரயில்வேயைப் போல 3 - அடி 3⅜ - அங்குல அகலமுள்ளது. இது இந்தியாவையும் ராமேச்வரம் தீவையும் சேர்க்கும் பொருட்டு 1914-ம் வர்ஷம் பிப்ரவரி மாஸம் 24-தேதி கட்டி முடிந்து சென்னை கவர்னர், ஸிலோன் தீவின் கவர்னர், மற்றும் சில பெரிய உத்யோகஸ்தர்கள் இவர்களால் முதல் முதல் திறக்கப்பட்டது. முன் காலத்தில் ஸ்ரீராமர் ஸீதாதேவியைத் தேடிப் போய் ஸமுத்ரத்தைத் தாண்டவேண்டி யிருக்கையில் அவருடைய பரமபக்தராகிய ஹநுமான் தமது வானர ஸைன்யத்தின் உதவியால் கட்டுவித்த அணையின் பேரில்தான் இப்பெரிய வாராவதிக்கு அஸ்திவாரம் போடப்பட்டிருக்கிறது. இவ்வாராவதியின் ஒரு விசேஷமென்னவென்றால், இதில் ஒவ்வொன்றும் 40 அடி நீளமுள்ள 145 கண்வாய்களும், இவைகளின் மத்தியில் 225 அடி நீளமுள்ளதும், ஸமுத்ரத்தில் கப்பல்கள் ஓடுவதற்காக ஒரு நூதன யந்த்ரத்தின் சக்தியால் செங்குத்தாய்த் தூக்கி நிறுத்தவும் மறுபடி ரயில்வண்டிகள் போவதற்காக கீழே படுக்கவைக்கவும் கூடியதுமான ஒரு கண்வாயும் சேர்த்து அமைக்கப்பெற்றது. யாத்ரிகர் ஸ்வாமி தர்சனம் செய்வதுடன் மனிதருடைய சக்தியையும் தர்சனம் செய்யலாம். இனி மண்டபம் ஸ்டேஷனில் இறங்காமல் நேரே ரயிலில் ராமேச்வரம் போகலாம்.

### தர்மபுரி ஓஸூர் ரயில்வே.

இது சேலம் ஜில்லாவில் 2 அடி 6 அங்குலம் அகலத்தில் 55 மைல் நீளமுள்ளது. சேலம் ஜில்லாவில் வடமேற்குப் பாகம் வெறுவாய் மழையற்றதாகையால், பஞ்ச நிவாரணத்தின் பொருட்டு இப்பாதை 1913-ம் வருஷம் மே மாஸம் கட்டி முடிக்கப் பட்டது.

### டிஸ்ட்ரிக்ட் போர்டு ரயில்வேக்கள்.

சென்னை ராஜதானியில் அநேக டிஸ்ட்ரிக்ட் போர்ட்டார் தங்கள் ஜில்லாக்களில் இருப்புப் பாதைகள் போடுவிப்பதினால் உண்டாகும் பொதுநன்மைகளையும் வ்ருத்தியையும் இப்பொழுது அறிந்திருக்கிறார்கள். 1884-ம் வர்ஷம் முதல்கொண்டு நம் ராஜதானியிலுள்ள டிஸ்ட்ரிக்ட் போர்டுகள், நிலவரியில் ரூபாய் ஒன்றுக்கு 3 பைவீதம் ரயில்வே ஸெஸ் வஸூலிக்க உத்தரவுபெற்று, 1914-ம் வர்ஷம் மார்ச்சுமீ 31-ம்தேதி வரையில் 96,31,820 ரூபாய் சேகரித்து வைத்திருக்கின்றன. 1913 வருஷம் ஜனவரிமுதல் 1914 வர்ஷம் மார்ச்சு முடிய, கீழே குறித்திருக்கும் பாதைகளை லோகல்பண்டுகளிலிருந்து போட உத்தரவாகி பாதைகள் போடப்பட்டும் வருகின்றன.

(1) கோயமுத்தூர் ஜில்லா போர்டாரால் போத்தனூரிலிருந்து பொள்ளாச்சிக்கு 3'-3⅜" அகலத்தில் 25 மைல் நீளமுள்ள ஒருபாதை. இதற்கு 11½ லக்ஷம் ரூபாய் செலவாகும்.

(2) குண்டூர் ஜில்லா போர்டாரால் தெனாலியிலிருந்து ரேபல்லிக்கு 5'-6" அகலத்தில் 23 மைல் நீலமுள்ள ஒரு பாதை. இதற்கு 14 லக்ஷம் ரூபாய் செலவாகும்.

கோயமுத்தூர் போர்டு சேகரித்திருக்கும் ரயில்வே ஸெஸ் போதாமையால், 5 லக்ஷம் ரூபாய் டிபெஞ்சர் கடன் வாங்கிக்கொள்ளும்படி உத்தரவாகி யிருக்கிறது.

மைஸூர் திருவாங்கூர் ராஜ்யங்களிலும் இருப்புப்பாதையின் உபயோகத்தை முன்னிலும் அதிகமாகப் பாராட்டுகிறார்கள். மைஸூர் ராஜ்யத்தில் 170 மைல் நீளம் பாதையும், திருவாங்கூரில் கொல்லம் ஸ்டேஷனிலிருந்து திருவனந்தபுரத்துக்கு ஏறக்குறைய 40 மைல் நீளம் பாதையும் போடப்பட்டு வருகின்றன.

ப்ரயாணிகளுடைய ஸௌகத்தைக் கருதி ரயில்வே கம்பெனியார் தங்களாலியன்றமட்டும் வஸதியான வண்டிகள் கட்ட ஏற்பாடு

செய்கிறார்கள். முதலாவது இரண்டாவது வகுப்பு வண்டிகளில் ஏற்கனவே யிருக்கும் ஸௌகர்யம் போதாதென்று புதுவகையான வண்டிகள் கட்டப்பட்டிருக்கின்றன. இவ் வண்டிகளில் பகலில் நால்வர் உட்காரும்படியாகவும் இரவில் அந்நால்வரும் தாராளமாய்ப் படுத்துக் கொள்ளும்படியாகவும் அமைத்துக் கட்டப்பட்டிருக்கின்றன. இன்டர்மீடியட் வகுப்பு வண்டிகளில் நெடுந்தூரம் ப்ரயாணம் செய்பவருக்கு இரண்டாவது வகுப்பைப்போல்ஸௌகர்யங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவஸரமாய்வந்து ஏறும் ஜனங்களுக்கு வழியில்தடங்கல் இல்லாமலிருக்கும்படியும், மூட்டை முடிச்சுகளைப் போட்டுவைக்க அநேக மரப்பரண்களும், கக்கூசுகளும், போதுமான ஜலம் நிரப்பத் தொட்டிகளும் இருக்கும்படியும் நீளமான மூன்றாவது வகுப்பு வண்டிகள் கட்டப்படுகின்றன.

ஏறக்குறைய எல்லா வண்டிகளிலும் கார்டு, ட்ரைவர்களை, ப்ரயாணிகள், விசேஷ காலங்களில் கூப்பிடுவதற்காக "அபாயச் சங்கிலிகள்" கட்டப்பட்டிருக்கின்றன. இச் சங்கிலிகளை யிழுப்பதினால் எந்த இடத்திலும் வண்டியை நிறுத்திவிடவும், எந்த அறையில் இழுக்கப்பட்டதென்று தெரிந்து கொள்ளவும் கூடும்.

இதுவரையில் இந்தியாவில் இருப்புப்பாதை வண்டிகளெல்லாம், அடிப்பாகம் எஃகினாலும் மேற்பாகம் (அநேகமாய் தேக்கு) மரத்தாலும் கட்டப்பட்டு வருகின்றன. மரத்தால் கட்டப்பட்டபாகம் நாளடைவில் ரொம்ப உஷ்ணத்தாலும் சீதளத்தாலும் பிளவடைந்து போவதாலும், தேக்கு மரம் தற்காலம் விலை அதிகரித்துப் போனதாலும் வண்டிகளை முழுவதும் எஃகினாலேயே கட்ட ப்ரயத்தினம் செய்து வருகிறார்கள். இம்மாதிரி வண்டிகள், ஒன்றோடொன்று தற்செயலாய் மோதிக்கொள்ளும் காலங்களில் தீப்பற்றாமலும் சுக்கல் சுக்கலாய் உடைந்து போகாமலும் இருக்கும். ஆயினும் உஷ்ண காலங்களில் இவ்வண்டிகள் நன்றாய் வெயிலில் காயும்போது உள்ளேயிருக்கும் ப்ரயாணிகள் புழுங்கிப்போகாமலிருக்க ஏதாவது தக்க ஏற்பாடு கண்டுபிடிக்கிற வரையில் இவ் வுஷ்ணதேசத்துக்கு இவை உதவாவென்பது நிச்சயம்.

வட இந்தியாவில் கவர்ன்மெண்டாரால் நடத்தப்படும் சில ரயில்வேக்களில் இதுவரையில் முதல், இரண்டாவது வகுப்புகளில் மாத்ரம் மின்ஸார விளக்கு போட்டிருந்தார்கள். இவ் விளக்குகளின் ஸௌகர்யத்தை உத்தேசித்து இன்டர் மீடியேட், மூன்றாவது வகுப்புகளிலும் மின்ஸார விளக்கேற்ற தீர்மானித்திருக்கிறார்கள்.

## RICE TRADE.
## அரிசி வ்யாபாரம்.

உலகத்தில் விளையும் அரிசியில் நூற்றில் 46 பங்கு இந்தியாவில் விளைகிறது. அது 1913-14 வர்ஷத்தில் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான சாப்பாட்டு தான்யங்களின் மொத்த மதிப்பில் நூற்றில் 59 பங்காகவும் இந்தியாவின் ஏற்றுமதியின் மொத்த மதிப்பில் நூற்றில் 11 பங்காகவும் இருந்தது. இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் அரிசியானது அதன் மொத்த விளைவில் நூற்றில் 9-பாகமாகிறது. இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் அரிசியில் பெரும்பான்மை கீழ் பர்மாவில் உண்டாகிறது. அங்கே மழைக்குறைவு என்பதே கிடையாது. ஆதலால் இதர தான்யங்களைப்போல் அரிசி விளைவு அவ்வளவாக சீதோஷ்ண ஸ்திதியைப்

பொருத்ததல்ல. இந்தியாவில் (அதாவது பர்மா நீங்கலாக) பருவகாலத்து மழை ஒரு தடவை தவறி விட்டால் உடனே க்ஷாமம் உண்டாய் விடுகிறது. அப்பொழுது பர்மாவிலிருந்து இதர தேசங்களுக்கு ஏராளமாய் ஏற்றுமதி செய்யப்படுகிற அரிசி அவ்வளவும் இந்தியா வுக்கு வந்துவிடுகிறது.

1910-11-ம் வர்ஷம் வரைக்கும் ஒரு வர்ஷத்தில் இந்தியாவிலிருந்து சராசரியில் 19,44,387 டன் அரிசி வெளி தேசங்களுக்கு ஏற்றுமதியாகி வந்தது. 1912-13-ம் வர்ஷம் அரிசி வ்யாபாரம் ரொம்ப ஜாஸ்தியாய் 27,63, 321 டன் ஏற்றுமதி செய்யப்பட்டது. சென்ற 1913-14 வர்ஷத்தில் வ்யாபாரம் குறைந்து 24,52,000 டன்தான் ஏற்றுமதியாயிற்று. இதன் விலை 26,64 லக்ஷம்ரூபா. உலக முழுமை யிலும், இந்தியாவே அதிகம் அரிசி ஏற்றுமதி செய்யும் தேசம். உலகத்தில் எல்லா பாகங் களுக்கும் குத்தின அரிசி அனுப்பப்படுகிறது. பின்வரும் குறிப்பிலிருந்து ஒவ்வொரு ராஜ் யத்திற்கும் எவ்வளவெவ்வளவு அரிசி போகிற தென்று தெரிந்துகொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| ஸிலோன் | ... | 4,74 | லக்ஷம் ரூ. |
| ஜெர்மனி | ... | 3,14 | ,, |
| ஹாலண்ட் | ... | 3,04 | ,, |
| ஸ்ட்ரெய்ட் ஸெட்டில்மெண்ட் | | 2,87 | ,, |
| ஆஸ்ட்ரியா-ஹங்கேரி | ... | 2,05 | ,, |
| இங்கலண்ட் | ... | 1,69 | ,, |
| ஜப்பான் | ... | 1,62 | ,, |

மொத்த ஏற்றுமதியில் நூற்றில் 47 பங்கு ஐரோப்பா தேசங்களுக்கும், 42 பாகம் ஆசியா தேசங்களுக்கும்ஏற்றுமதிசெய்யப்படுகின்றன. பாக்கி 11 பங்கு கீழ் ஆப்ரிக்காவிலும் தென் அமெரிக்காவிலும், மேல் இந்திய தீவுகளிலும் செலவாகிறது.ஏற்றுமதியாகும் அரிசியில் நூற் றில் 52 பாகம் சாப்பாட்டுக்காக உபயோகப் படுகிறது. மற்ற பாகத்தை ஐரோப்பாவில் 'ஸ்டார்ச்' உண்டாக்கவும், சாராயம் இறக்கவும், சாப்பாட்டுக்கும் உபயோகப்படுத்துகிறார்கள். அந்தர் ஒன்றுக்கு 1911-12-ல் ரூபா 5-14-5 ஆகவும், 1912-13-ல் ரூபா 5-9-7 ஆகவும் இருந்த அரிசி சென்ற 1913-14--ல் ரூ. 5-8-0 ஆக ஆகிவிட்டது. ஆனால் இந்த விலைகள் ஸாதாரண விலைகளைக் காட்டிலும் அதிகந் தான். 1909-10 - முதல் 1913-14 - வரை யில் ஐந்து வர்ஷ சராசரி ரூபா 5-5-8 ஆகிறது. 1903-4 முதல் பத்து வர்ஷத்து சரா சரி ரூபா 5-0-10 ஆகிறது.

இந்தியாவிலிருந்து பர்மா உள்பட ஏற்று மதியாகும் அரிசியில் முக்கால் பங்கு ஸாதார ணமாய் பர்மாவிலிருந்தே ஏற்றுமதி செய்யப் படுகிறது.

பர்மாவை மட்டும் எடுத்துப் பார்த்தாலும் 1913--14ம் வர்ஷத்தில் அங்கிருந்து வெளி தேசங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட சரக் குகளில் நூற்றில் 66 பங்கு அரிசியே. அந்த வர்ஷம் ஏற்றுமதி செய்யப்பட்ட அரிசி மற் றெல்லா வர்ஷங்களைக் காட்டிலும் ஜாஸ்தி யானது மாத்ரமல்லாமல், அளவிலும், விலை யிலும் முந்தின வர்ஷத்தைவிட அதிகமா யிருந்தது. பர்மா மாகாணத்திலிருந்து வெளி நாடுகளுக்குப் போகும் அரிசியின் மொத்த அளவில் நூற்றில் 68 பங்கும் ரங்கூனிலிருந்தே ஏற்றுமதி செய்யப்படுகிறது. பெங்காளத்தில் வெள்ளத்தினாலும், பீஹார்,ஐக்யமாகாணங்கள் ஆகிய இவ்விடங்களில் மழைக்குறைவினாலும், தென் இந்தியாவிலுண்டான விளைவுக் குறை வினாலும், 1913-14-ம் வர்ஷத்து விளைவு முழு மையும் இந்தியாவின் உபயோகத்துக்கே வே ண்டி யிருந்ததெனச் சொல்லலாம். 1912-13-ல் பர்மாவிலிருந்து இந்தியாவுக்கு வந்த அரிசி யைக் காட்டிலும், 1913-14-ம் வர்ஷம் வந்த வளவு நூற்றில் 234 பங்கு ஜாஸ்தியா யிருக் கிறது.

## MINISTERS OF THE BELLIGERENTS.
## யுத்தம் செய்யும் தேசங்களின் மந்த்ரிகள்.

[இங்க்லண்டின் யுத்த மந்த்ரியாகிய லார்ட் கிச்சனர், ப்ரான்ஸின் ப்ரதம மந்த்ரியாகிய மா. விவியானி, அன்யதேச வ்யவஹார மந்த்ரியாகிய மா. டெல்காஸே ஆகிய இவர்களின் ஜீவ்ய சரித்ரக் குறிப்புகள் ஸெப்டம்பர் மாஸத்திய 'ஜநுபிமானி'யில் 6-7-ம் பக்கங்களில் வெளிவந்திருக்கின்றன.]

### ENGLAND.
### இங்கலண்ட்.

மிஸ்டர் ஆஸ்க்வித்.

இங்க்லண்டின் ப்ரதம மந்த்ரியின் பெயர் ஹெர்பர்ட் ஹென்ரி ஆஸ்க்வித். இவர் இங்க்லண்டிலுள்ள யார்க்ஷைர் என்னும் ஜில்லாவில் (கௌண்டி) மார்லி யென்னும் ஊரில் 1852-ம் வர்ஷம் பிறந்தார். இவருடைய பால்யத்திலேயே இவர் தகப்பனர் இறந்துபோனுர். பால்யத்தில் லண்டனிலுள்ள ஒரு பாடசாலையில் வாசித்துப் பிறகு ஆக்ஸ்பர்ட் ஸர்வகலாசாலை (யூனிவர்ஸிட்டி) யைச்சேர்ந்த ஒரு காலேஜில் வாசித்தார். இவர் 1886-ம் வர்ஷம் பார்லிமெண்டில் ஒரு மெம்பராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். 1876-ம் வர்ஷம் முதல் சில வர்ஷகாலம் பாரிஸ்டராக இருந்து வந்தார். 1892-ம் வர்ஷம் முதல் 1895-ம் வர்ஷம் வரையில் காபினட் என்று சொல்லப்படும் மந்த்ராலோசனை ஸபையில் உள்நாட்டு மந்த்ரியாக (ஹோம் ஸெக்ரெடரி) இருந்தார். பிறகு மறுபடியும் பாரிஸ்டராக உத்யோகம் பார்த்து வந்தார். 1905-ம் வர்ஷத்தில் மறுபடியும் சான்ஸலர் அப் தி எக்ஸ்ச்சகர் என்னும் பொக்கிஷ மந்த்ரியாக நியமிக்கப்பட்டார். 1908-ம் வர்ஷத்தில் ப்ரதம மந்த்ரியாக நியமிக்கப்பட்டார். ஸமீபத்தில் ப்ரதம மந்த்ரி வேலையோடு யுத்த மந்த்ரி வேலையையும் பார்த்து வந்தார்.

இப்போது நடக்கும் யுத்தம் ப்ரமாதமான யுத்தமானதால், தாம் ப்ரதம மந்த்ரியாயிருப்பதோடு, யுத்த மந்த்ரியாயிருப்பது தகுதியல்லவென்று ராணுவ விஷயங்களில் ஸமர்த்தரான லார்ட் கிச்சனரை அந்த யுத்த மந்த்ரி ஸ்தானத்தில் நியமித்து விட்டு, தாம் அந்த வேலையிலிருந்து விலகிக்கொண்டார்.

ஸர் எட்வர்ட் க்ரே.

இங்க்லண்டின் அன்யதேச வ்யவஹார மந்த்ரியின் பெயர் ஸர் எட்வர்ட் க்ரே. இவர் 1905-ம் வர்ஷம் முதல் இந்த உத்யோகத்தில் இருந்து வருகிறுர். 1862-ம் வர்ஷத்தில் ஜனனமானுர். 1885-ம் வர்ஷம் முதல் பார்லிமெண்டில் மெம்பராக இருந்து வருகிறுர். இவருக்கு அன்யதேச வ்யவஹாரங்களில் விசேஷ ஞானமுண்டு. 1892-ம் வர்ஷம் முதல் 1895-ம் வர்ஷம் வரையில் உதவி அன்யதேச வ்யவஹார மந்த்ரியாக வேலை பார்த்து வந்தார். இவருடைய ஸாமர்த்யத்தைப்பற்றி முன்பு இங்க்லண்டின் ப்ரதம மந்த்ரியாயிருந்த கீர்த்திபெற்ற ராஜதந்த்ரியான மிஸ்டர் க்ளாட்ஸ்டன் ரொம்பவும் புகழ்ந்து பேசி யிருக்கிறுர். எல்லா ராஜ தந்த்ரிகளும் இவரிடம் கௌரவமும் நம்பிக்கையும் வைத்திருக்கிறுர்கள். உள்நாட்டு வ்யவஹாரங்களில் ஒருவர்க்கொருவர் எவ்வளவு அபிப்ராய பேதமிருந்தாலும், அன்ய தேச வ்யவஹாரங்களில் மாத்ரம் ஒருவரும் இவருடைய அபிப்ராயத்தை ஆக்ஷேபிப்பது கிடையாதாம். ஸமீபத்தில் பால்கன் யுத்தம் நடந்தபோது, அந்த யுத்தம் ஐரோப்பா முழுமையும் பரவாமலிருக்கும்படி ரொம்பவும் பாடுபட்டு வந்தார். இவர் (க்ரே) இப்போது நடந்து வரும் யுத்தத்தைத் தடுப்பதற்கு தம்மாலான மட்டும் முயற்சித்தார்,

ஆனுல் அவர் சொன்ன ப்ரேரணைகளை ஜெர்மானியர்கள் ஏற்றுக்கொள்ளாததால் இங்க்லண்ட் ஜெர்மனிமேல் படையெடுக்கலாயிற்று. இவர் சென்ற ஆகஸ்ட் மாஸம் பார்லிமெண்டில் இங்க்லண்ட் ஜெர்மனியோடு யுத்தம் செய்வதற்கு காரணங்கள் இன்னவென்பதை விரிவாக எடுத்துச் சொன்னுர்.

இவருக்கு படாடோபம் கிடையாது. இவருக்கு டென்னிஸ் ஆடுவதிலும், மீன் பிடிப்பதிலும் ரொம்ப ப்ரியமுண்டு.

மிஸ்டர் வின்ஸ்டன் சர்ச்சில்.

இவர் 1911-ம் வர்ஷம் முதல் இங்க்லண்டின் கப்பல் படை மந்த்ரியாக இருந்து வருகிறுர். இவர் 1874-ம் வர்ஷம் ஜனனமானுர். 1895-ம் வர்ஷத்தில் ராணுவத்தில் சேர்ந்தார். இவர் இந்தியாவிலுள்ள ப்ரிட்டிஷ் ஸைன்யத்தில் சேர்ந்திருந்து எல்லைநாட்டு யுத்தங்களில் சண்டை செய்திருக்கிறுர். 1898-ம் வர்ஷத்தில் ஸூடான் யுத்தத்தில் போர்செய்து க்யாதி யடைந்திருக்கிறுர். தென்னுப்ரிக்கா போயர் யுத்தத்தில் ஒரு ஸமாசாரப் பத்ரிகையின் யுத்த நிருபராக இருந்தார். பிறகு 1906-ம் வர்ஷம் முதல் 1908-ம் வர்ஷம் வரையில் குடியேற்ற நாட்டு உதவி ஸெக்ரெடரியாகவும், பிறகு போர்ட் அப் ட்ரேட் என்னும் வ்யாபார ஸபையின் ப்ரெஸிடெண்ட் என்று சொல்லப்படும் வ்யாபார மந்த்ரியாகவும், உள்நாட்டு மந்த்ரியாகவும் இருந்துவந்தார். இவர் ப்ரஸங்கம் செய்வதில் ரொம்ப ஸாமர்த்யசாலி. ராஜாங்க நிர்வாகத்தில் ரொம்ப கெட்டிக்காரர். என்ன செலவானுலும் சரி, ப்ரிட்டிஷ் கப்பல்படை மற்ற தேசத்துக் கப்பல்படைகளை விட உயர்ந்ததாயிருக்கவேண்டுமென்பது இவருடைய கொள்கை.

மிஸ்டர் லாய்ட் ஜார்ஜ்.

இவர் இங்க்லண்டின் பொக்கிஷ மந்த்ரி. 1908-ம் வர்ஷம் முதல் இவர் இந்த உத்யோகத்திலிருந்து வருகிறுர். 1863-ம் வர்ஷத்தில் பிறந்தார். இவர் சில காலம் வரையில் போர்ட் அப் ட்ரேட் என்னும் கவர்ன்மெண்ட் வ்யாபார ஸபையின் தலைவராய் வ்யாபார மந்த்ரியாக இருந்தார். இவர் பொக்கிஷ மந்த்ரியாக வந்தபிறகு தொழில் சாலைகளிலுள்ள வேலையாட்களுக்கும் மற்ற தொழிலாளிகளுக்கும் உதவியாக ஒரு இன்ஷூரென்ஸ் சட்டம் ஏற்படுத்தினுர். அதன்படி வேலையாட்களும், தொழில் நடத்துவோர்களும், கவர்ன்மெண்டாரும் ஒரு குறிப்பிட்ட தொகை செலுத்தி, அந்த தொகையை ஒரு பண்டாக ஏற்படுத்தி அதிலிருந்து வேலையாட்கள் வ்யாதியால் வேலைசெய்து ஸம்பாதிக்க முடியாமல் போனுலும், வேலையே கிடைக்காமல் போனுலும், அவர்களுக்குப் பணங்கொடுத்து உதவுவார்கள். மிஸ்டர்லாய்ட் ஜார்ஜ் ரொம்ப ஸாமர்த்யமாய்ப் பேசக் கூடியவர்.

## GERMANY.

### ஜெர்மனி.

டாக்டர் வான் பெட்மன்-ஹால்வெக்.

ஜெர்மனியின் ப்ரதம மந்த்ரியின் பெயர் டாக்டர் வான் பெட்மன்-ஹால்வெக். இவர் 1856-ம் வர்ஷம் ஜனனமானுர். இவர் கெய்ஸருக்கு ரொம்ப ஆப்த ஸ்நேகிதராம். பால்யத்தில் இவரும் கெய்ஸரும் பான் யூனிவர்ஸிட்டியில் சேர்ந்து வாசித்தவர்களாம். இவர் 1885-ம் வர்ஷத்தில் ராஜாங்க உத்யோகத்தில் அமர்ந்து படிப்படியாய் உயர்ந்த உத்யோகங்களை யடைந்து 1907-ம் வர்ஷம் ஜெர்மனியின் உள்நாட்டு மந்த்ரியாக நியமிக்கப்பட்டார். பிறகு 1909-ம் வர்ஷத்தில் "இம்பீரியல் சான்ஸலர்' என்று சொல்லப்படும் ப்ரதம மந்த்ரியாக ஆனுர். இவர் அதிகப்பிடிவாதம் உள்ளவரல்ல. கெய்ஸர் சொல்லுகிறபடி ஆடுகிறவர். ஆனுல் இந்த யுத்தத்தில் இவருடைய

பெயர் முன்வந்துவிட்டது. ஐரோப்பிய வல்லரசுகளின் உடன்படிக்கையின்படி பெல்ஜியம் தனியரசாக இருக்கவேண்டுமென்று ஏற்பட்ட நிபந்தனைக்கு உள்பட்டே ஜெர்மனி நடக்குமா என்று இங்க்லீஷார் கேட்டதற்கு அது முடியாதென்றும், எல்லா அரசுகளும் சேர்ந்து ஒப்புக்கொண்டு கையெழுத்துப் போட்ட "துளியூண்டுக் கடுதாசி"க்காக இங்க்லண்ட் ஜெர்மனியோடு சண்டை போடுவது ந்யாயமாகாதென்றும் சொன்னதால் இவர் பெயர் ரொம்ப கெட்டுப் போய்விட்டது.

ஹேர் வான் யாகேள.

இவர் 1913-ம் வர்ஷமுதல் ஜெர்மனியின் அன்யதேச வ்யவஹார மந்த்ரியாக இருந்து வருகிறார். இவருக்கு வயது 50-க்கு மேலாகிறது. இன்னும் ப்ரும்மசாரியாகவே இருக்கிறார். இவர் சிலகாலம் இட்டலியில் ஜெர்மன் ராஜாங்கத்தின் ப்ரதிநிதியாக இருந்து வந்தார். இவர் கெய்ஸருக்கு ரொம்ப வேண்டியவராம்.

அட்மிரல் ஹேர் வான் டீர்பிட்ஸ்.

ஜெர்மன் ராஜ்யத்தின் கப்பல் படைக்கு கெய்ஸர் சக்ரவர்த்தியே தலைவராக இருக்கிறார். ஜெர்மன் கப்பல்படை மந்த்ரியின் பெயர் அட்மிரல் ஹேர் வான் டீர்பிட்ஸ். இவருக்கு இப்போது 64-வயது ஆகிறது. ஜெர்மனிக்குள்ள கப்பல்படை வலிமையும், மேன்மையும் இவராலேயே ஏற்பட்டனவென்று சொல்லப்படுகிறது.

இவர் 1865-ம் வர்ஷம் கப்பல்படையில் சேர்ந்துகொண்டார். 1894-ம் வர்ஷத்தில் நடந்த ஒரு போலிச் சண்டையில் இவர் காட்டிய ஸாமர்த்யத்தால் இவர் பேரில் கெய்ஸருக்கு விசேஷ ப்ரீதி ஏற்பட்டது. பிறகு 1898-ம் வர்ஷத்தில் கப்பல் படை மந்த்ரியாக நியமிக்கப்பட்டார். இவர் கப்பல்படையில் அனேக சீர்திருத்தங்கள் செய்திருக்கிறார்.

**RUSSIA.**

ரஷ்யா

இவான் கோர்மிகின்.

ரஷ்யாவின் ப்ரதம மந்த்ரியின் பெயர் இவான் கோர்மிகின். இவருக்குப் பொருளாதார சாஸ்த்ரத்திலும் ஜனஸமூகத்தைப் பற்றிய சாஸ்த்ரத்திலும் விசேஷ ஞானம் உண்டு. ரஷ்யாவின் பொருளாதார நிலைமையைச் சீர்திருத்த ஏற்பாடுகள் செய்ய எண்ணங்கொண்டிருக்கிறாராம்.

மா. ஸாஸனுப். *

ரஷ்யாவின் அன்யதேச வ்யவஹார மந்த்ரியின் பெயர் மாஸ்யே ஸாஸனுப். 1910-ம் வர்ஷ முதல் இவர் இந்த உத்யோகத்திலிருந்து வருகிறார். ரஷ்யா, இங்க்லண்ட், ப்ரான்ஸ் ஆகிய இந்த மூன்று தேசங்களுக்குள் ஸ்னேகிதம் ஏற்பட்டிருப்பதற்கு இவர் தான் முக்ய காரணமாம். இவர் சில காலத்துக்கு முன்னால் இங்க்லண்டிலுள்ள ரஷ்யாவின் ப்ரதிநிதிக்கு ஸெக்ரடரியாக இருந்தார். இன்னும் பாரிஸிலும், ரோமிலும் இருக்கும் ரஷ்ய ப்ரதிநிதி ஆபீஸிலும் வேலை பார்த்து வந்திருக்கிறார். அன்ய தேச வ்யவஹாரங்களைத் திறமாய் நடத்துவதில் இவரைப்போல் ஸாமர்த்யசாலி ஐரோப்பாவில் ஒருவருமில்லையாம். ரஷ்ய சக்ரவர்த்தி இவரிடத்தில் ரொம்ப நம்பிக்கை வைத்திருக்கிறாராம். மா. ஸாஸனுப் ப்ரஸங்கம் செய்வதில் ரொம்ப கெட்டிக்காரர்.

**AUSTRIA HUNGARY.**

ஆஸ்ட்ரியா-ஹங்கேரி.

ஆஸ்ட்ரியா-ஹங்கேரி என்னும் ராஜ்யம் ஆஸ்ட்ரியா என்னும் நாடும் ஹங்கேரி யென்னும் நாடும் சேர்ந்தது. இரண்டு தேசங்களும்

* மா. என்பதை மாஸ்யே என்று வாசிக்கவும். இங்க்லீஷில் மிஸ்டர் என்று சொல்வதை ப்ரெஞ்ச் முதலிய பாஷைகளில் மாஸ்யே என்று சொல்வது வழக்கம்.]

உள் நாட்டு வ்யவஹாரங்களில் ஒன்றுக்கொன்று கீழ்ப்பட்டவையாயிராமல் ஸ்வாதீனமாயிருக்கின்றன. இவைகளில் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி கவர்ன்மெண்டுகள் உண்டு. ஒவ்வொரு கவர்ன்மெண்டுக்கும் ப்ரத்யேகமான ப்ரதம மந்த்ரி, உள்நாட்டு மந்த்ரி, வ்யாபார மந்த்ரி, வரவுசெலவு மந்த்ரி முதலிய மந்த்ரிகள் உண்டு. ஆனல் அன்ய தேச வ்யவஹாரங்கள், தேச பாதுகாப்பு, இரண்டு தேசங்களுக்கும் பொதுவான வரவு செலவு ஆகிய இவைகளுக்கு இரண்டு தேசங்களுக்கும் பொதுவாய் சில மந்த்ரிகள் இருக்கிருர்கள். இவர்களில் அன்யதேச வ்யவஹாரங்களுக்கு மந்த்ரியாயிருப்பவர் கௌண்ட் லேப்போல்ட் பேர்க்டோல்ட் என்பவர். இவருக்கு இப்போது 50-வயஸாகிறது. இவர் சில காலத்துக்கு முன்னல் ஆஸ்ட்ரியாவின் ப்ரதிநிதியாக பிட்ரோக்ராட் பட்டணத்தில் இருந்து வந்தார். ஆஸ்ட்ரியா ராஜ்யத்தில் ஸ்லாவ் என்னும் ஜாதி ஜனங்கள் ஏராளமாக இருக்கிருர்கள். இவர்களில் பெரும்பாலார் ஸெர்வியாவுடன் சேர்ந்துகொள்ள வேண்டுமென்று எண்ணியிருப்பதால் இவர்களுக்கு ஆஸ்ட்ரியா கவர்ன்மெண்டில் ப்ரியம் கிடையாது. கௌண்ட் பேர்க்ட்டோல்ட் அவர்களை த்ருப்திப்படுத்தி கவர்ன்மெண்டினிடம் விச்வாஸமாயிருக்கும்படி செய்ய எண்ணியிருந்தாராம். காலஞ்சென்ற ஆஸ்ட்ரியா இளவரசராகிய ஆர்ச்-ட்யூக் ப்ரான்ஸ் பெர்டினண்டும் இவ்விதமே எண்ணியிருந்தாராம்.

கௌண்ட் பேர்க்டோல்ட் இளவரசரின் கொலை ஸம்பந்தமாக ஸெர்வியாவைக் கண்டிக்க ப்ரயத்தனப் பட்டதனல்தான் ப்ரமாதமான யுத்தம் ஏற்படலாயிற்று.

ஆஸ்ட்ரியாவின் ப்ரதம மந்த்ரியின் பெயர் கௌண்ட் ஸ்டார்க். இவர் ஒரு ஜெர்மன் வம்சத்தைச் சேர்ந்தவர். காலஞ்சென்ற ஆஸ்ட்ரிய இளவரசருக்கு ரொம்ப அந்தரங்க ஸ்நேகிதர்.

ஹங்கேரியின் ப்ரதம மந்த்ரியின் பெயர் கௌண்ட் டிஸ்ஸா. இவர் எக்கார்யத்தையும் பிறருடைய உதவியில்லாமல் தாமாகவே யோசித்துச் செய்யக்கூடியவர்.

**JAPAN.**

ஜப்பான்.

கௌண்ட் ஒகுமா.

ஜப்பானின் ப்ரதம மந்த்ரியின் பெயர் கௌண்ட் ஒகுமா. இவர் ப்ரதம மந்த்ரியாயிருப்பதோடு உள் நாட்டு மந்த்ரியாயுமிருக்கிருர். இவர் 1838-ம் வர்ஷம் பிறந்தார். இவர் பால்யத்தில் ஜப்பான் பாஷையோடு, சீன பாஷை, இங்க்லீஷ் பாஷை, டட்ச் பாஷை ஆகிய இவைகளில் பயின்று தேர்ச்சியடைந்தார். இவர் விசேஷமாய் இங்க்லீஷ் உபாத்யாயர்களிடம் தான் கல்வி பயின்றுர். இங்க்லீஷ்க்காரர்களுடைய ஸகவாஸத்தால் இவருக்கு இங்க்லீஷ் அரசாட்சி ஏற்பாட்டில் விசேஷ ப்ரியம் ஏற்பட்டிருக்கிறது. இவர் சிலகாலம் ஜப்பானில் அன்யதேச வ்யவஹார மந்த்ரியாகவும், பொக்கிஷ மந்த்ரியாகவும், வரவு செலவு மந்த்ரியாகவும் இருந்துவந்தார். இவர் ரொம்ப திறமைவாய்ந்த ராஜ தந்த்ரியென்று சொல்லப்படுகிறது.

**SERVIA.**

ஸெர்வியா.

மாஸ்யே பாஸிட்ச்.

இவர் ஸெர்வியாவின் ப்ரதம மந்த்ரி. இவருக்கு இப்போது 65-வயஸாகிறது. இவர் இப்போதுள்ள ராஜ வம்சத்துக்கு முன்னிருந்த ராஜ வம்சத்து அரசர் காலத்திலும் ப்ரதம மந்த்ரியாக இருந்து வந்திருக்கிருர்.

ஸெர்வியா எல்லா விஷயத்திலும், அதாவது ராஜாங்கம், வ்யாபாரம், பொருளாதாரம் ஆகிய இவைகளில் ஸ்வாதீனமாக இருக்கவேண்டுமென்றும், அந்த விஷயங்களில் ரொம்ப முன்னேற்றமடைய வேண்டுமென்றும் இவர் எண்ணியிருக்கிருர்.

# Departmental Notes.
# பகுதிக் குறிப்புகள்.

## EDUCATION.
## வித்யாவிஷயம்.

### Education for Workmen.

தொழிலாளிகளுக்குக் கல்வி :—இந்தியாவில் சிறுவர்கள் ஏதேனும் ஒரு தொழிலைக் கற்றுக் கொள்ளுவதற்கு முன்னால், அவர்கள் இஷ்டப் பட்டாலும் ஸரி, இஷ்டப்படாவிட்டாலும் ஸரி, அவர்களுக்கு கட்டாயப்படுத்தி எழுதப்படிக்கக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்று அநேக வித்யாபிமானிகள் எண்ணி வருகிறார்கள். ஐரோப்பாவிலுள்ள கோவில்களும், இந்தியாவிலுள்ள கோவில்களும் எழுதப்படிக்கத் தெரியாத வேலையாட்களால் தான் கட்டப்பட்டன வென்பதையும், அவர்கள் இப்போது உயிருடனிருந்தால், எழுதப்படிக்கத் தெரிந்த வேலையாட்களைவிட அதிக சம்பளம் பெறக்கூடியவர்களாயிருப்பார்களென்பதையும் அந்த வித்யாபிமானிகள் மறந்துவிடுகிறார்கள். அவர்கள் ப்ரைமரிக்கல்வியைத் தாறுமாறாகச் செய்ததோடு நில்லாமல் டெக்னிகல் கல்வியோடு சாஸ்த்ரக் கல்வியையும் சேர்த்து, டெக்னிகல் கல்வியென்பதன் அர்த்தத்தையே மாற்றிவிட்டார்கள். தொழிலாளிகளின் சிறுவர்களுக்கும் படிப்பதில் ரொம்ப கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அவர்களுக்கு டெக்னிகல் விஷயங்கள் அதாவது தொழில் ஸம்பந்தமான விஷயங்களைக் கற்பதற்குத்தான் பாடசாலைக் காலம் போதுமானதா யிருக்கிறது. அதோடு மற்ற படிப்புகளையும் கலப்பதால் அவர்கள் படிப்புச்கு ரொம்ப குந்தகம் ஏற்படுகிறது. இந்தக் காலத்தில் வேலையாட்கள் ஏராளமாக வேண்டியிருக்கிறது. அவர்களுக்கு கொடுத்த வேலையை நன்றாய் செய்யத் தெரிந்தால் முதலாளிகள் நல்ல சம்பளமும் கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். ஆனால் தொழிலாளிகளுக்கு எல்லாவிஷயத்திலும் கொஞ்சம் தெரிந்திருந்து எந்தத்தொழிலிலும் பூர்த்தியான அறிவு இல்லாமலிருந்தால் அவர்கள் வேலைக்கு ரொம்ப லாயக்காக இருப்பதற்கில்லை.

ஆகையால் தொழிலாளிகளுக்கு தொழில் ஸம்பந்தமான விஷயங்களையே ரொம்பவும் அதிகமாசக் கற்றுக் கொடுக்க வேண்டும். சாஸ்த்ர விஷயங்களையும் மற்ற பாடங்களையும் அதிகமாகக் கற்றுக்கொடுக்க முயலுவது கூடாது என்று 'இந்தியன் டெக்ஸ்டைல் ஜர்னல்' என்னும் பத்ரிகை எழுதுகிறது.

### Technical Education in Madras.

சென்னையில் டெக்னிகல் கல்வி :—சென்னையில் டெக்னிகல் கல்வியை அபிவ்ருத்தி செய்வதற்காக சென்னை கவர்ன்மெண்டார் மதுரையிலுள்ள டெக்னிகல் இன்ஸ்டிட்யூட் என்னும் டெக்னிகல் பள்ளிக்கூடத்தின் அமைப்பை மாற்றும்படிக்கு ஏற்கனவே உத்தரவு செய்திருக்கிறார்கள், காக்கினாடாவில் ஒரு மெக்கானிகல் இஞ்ஜினியரிங் ஸ்கூல் ஸ்தாபிப்பதாகத் தீர்மானித்திருக்கிறார்கள். சென்னையின் வடபாகத்தில் ஒரு டெக்னிகல் ஸ்கூல் ஸ்தாபிப்பதைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த ஸ்கூல்கள் ஸ்தாபிப்பதற்கும், அவைகள் வ்ருத்தியாவதற்கும் காலமாகுமாதலால், அதற்குமுன் தற்கால ஏற்பாடாக இந்தியாவின் மற்ற பாகங்களில் உள்ள நல்ல டெக்னிகல் ஸ்கூல்களில் பயிற்சிபெற விரும்பும் மாணவர்களுக்கு ஸௌகர்யங்கள் செய்து கொடுப்பதாகத் தீர்மானித்திருக்கிறார்கள். தற்காலம் வர்ஷந்தோறும் ஆறு சென்னைவாஸிகளுக்கு மாஸம் 30 ரூபாய் வீதம் ஸ்காலர் ஷிப்புகள் கொடுப்பதாகத் தீர்மானித்திருக்கிறார்கள். ஸ்காலர்ஷிப்பு வாங்கிக் கொள்ளுகிறவர்கள் பம்பாயிலுள்ள விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிட்யூட்டில் சேர்ந்து மெக்கானிகல் இஞ்ஜினியரிங், எலெக்ட்ரிகல் இஞ்ஜினியரிங், துணிகள் நெசவு, டெக்னிகல் ரஸாயன சாஸ்த்ரம் ஆகிய இவைகளில் ஏதாவது ஒன்றைக் கற்றுக்கொள்ளலாம். மாணவர்களுக்கு நான்கு வர்ஷகாலம் ஸ்காலர்ஷிப்புகள் கொடுத்துவருவார்கள்.

### Grants For Elementary Education.

எலிமெண்டரி கல்விக்கு க்ராண்டுகள்.—புதிதாக எலிமெண்டரி ஸ்கூல்கள் ஸ்தாபிக்கவும் ஏற்கனவேயுள்ள எலிமெண்டரி ஸ்கூல்களில் உள்ள உபாத்யாயர்களை அதிகப்படுத்தவும் லோகல் போர்டுகளுக்கும் முனிஸிபாலிடிகளுக்கும் 1,47,922 ரூபாய் க்ராண்டு கொடுக்கும்படி கவர்ன்மெண்டார் உத்தரவு செய்திருக்கிறார்கள். இந்தத் தொகையில் 69,442 ரூபாய் புது ஸ்கூல்கள் ஸ்தாபிக்கவும், 78, 840 ரூபாய் ஏற்கனவேயுள்ள ஸ்கூல்களில் உபாத்யாயர்களை அதிகப்படுத்தவும் கொடுக்கப்படும்.

## TAMIL LITERATURE.
## தமிழ்க் கல்வி.

### Some Lullabies.

சில தாலாட்டுப் பாட்டுகள்.—'விவேக சிந்தாமணி' யின் அக்டோபர் மாஸத்து ஸஞ்சிகையில் சில நேர்த்தியான தாலாட்டுப் பாட்டுக்களும் அவைகளுக்கு தெளிவான அர்த்தமும் வெளியாயிருக்கின்றன. அவைகளில் தாலாட்டுகளை மாத்ரம் கீழே எழுதுகிறோம்.

1. ஆறிரண்டும் காவேரி, அதன் நடுவே ஸ்ரீரங்கம், சுவாமி இரண்டு சையினுலே, தந்த என்தன் திரவியமோ.

2. பச்சை இலுப்பைவெட்டி, பால்வடியத் தொட்டிலிட்டு, தொட்டிலிட்ட அம்மானே, நீ பட்டினியாப் போகாதே.

3. ஆராரோ, ஆராரோ, என்னரசே, ஆராரோ, சீராரும் எங்கள் குலதீபமே நீ, ஆராரோ.

4. கங்கைபுனை ஸ்ரீ நாதன், கருணையினுல் என்வயிற்றில், மங்களமாய் வந்துதித்த, மணியே நீ கண்வளராய்.

5. பாலே பழரஸமே, பசரஒண்ணுத் தெள்ளமுதே, மேலேவிண் ணோர்மகிழும், வித்தே நீ கண்வளராய்.

6. வேதமனு நூற்கலைகள், விளங்கிவரும் இந்நாட்டில், கீதமொழி கேட்கவந்த, பைங்கிளியே துயில் கொள்வாய்.

7. வண்ணமணித் தொட்டிலிலே, வாய்த்த செம்பொற் கட்டிலிலே, கண்ணே என்கண்மணியே, கற்பகமே நித்திரைசெய்.

8. தண்டைமணி சத்தமிட, தாய்மார்கள் முத்தமிட, தொண்டையுடன் வாய்மூடி, துரைமகனே கண்ணமர்வாய்.

9. அத்தைமனம் நோகாமல், உன் அண்ணன்மனம் வேகாமல், சித்தமதில் தயைகொண்டு, சிகாமணியே கண்ணுறங்காய்.

10. தாய்மார்கள் வைதாரோ, தாதியர் என் செய்தாரோ, வாய்திறந்து சொல்லியெங்கள், மன்னவனே கண் அடைவாய்.

11. அத்தை அடித்தாளோ, அக்காள்தான் அடித்தாளோ, முத்தான வாய்திறந்து, மொழிந்துறங்காய் கண்மணியே.

12. தங்கத்தால் யானைகளும், தந்தத்தால் சேனைகளும், அந்தமாக நான்கொடுப்பேன், புத்திரனே கண்வளராய்.

13. பொற்சரிகை வஸ்திரமும், போற்றுபல சித்திரமும், நற்சரிகை அங்கியுமே, நான்தருவேன் நித்திரைசெய்.

14. பஞ்சவர்ணக் கிளிகொஞ்ச, பாடும்குயில் ஓசைமிஞ்ச, எஞ்சலில்லாப் பஞ்சணைமேல், என்மகனே கண்வளராய்.

15. தந்தையொரு பக்கம்நிற்க, தாயுமொரு பக்கம் நிற்கச், சிந்தை மகிழ் விற்பார்க்கும், தெருட்கடலே நித்திரைசெய்.

16. சரியாய் தவம்தானம் தருமங்கள் செய்தளங்கள், கலிதீர்க்க வந்துதித்த, காதலனே கண்வளராய்.

17. இளையோ ருடன்தெருவில், இன்பமாய்த் தேருருட்டி, விளையாடி வந்துநின்ற, வேலவனே நீ துயிலாய்.

18. மதுரையிலே குதிரை கட்டி, மாந்தோப்பு விடுதிவிட்டு, சடுதியிலே வந்திறங்கும், என் செல்வன்மகன் பால்குடமே யுறங்குறங்கு.

19. அடித்தாரைச் சொல்லியழு, ஆக்கினைகள் பண்ணிவைப்போம், தொட்டாரைச் சொல்லியழு, தண்டனைகள் பண்ணிவைப்போம்.

### Meyyaram.

மெய்யறம்.—இந்த நூல் ' மனம்போல வாழ்வு ', 'அகமேபுறம்' என்னும் புஸ்தகங்களை எழுதிய மிஸ்டர் வ. உ. சிதம்பரம் பிள்ளை எழுதியதாகும். இது திருவள்ளுவநாயனுர் செய்த திருக்குறளின் வழிநூலாக அறம், பொருள், இன்பம், வீடு என்னும் சதுர்வித புருஷார்த்தங்களைப் பற்றிக் கூறும் நூலாகும். இது மாணவ இயல், இல்வாழ்வியல், அரசியல், அந்தணவியல், மெய்யியல் என்று 5-இயல்களாக(பிரிவுகளாகப்) பிரிக்கப்பட்டிருக்கிறது. மொத்தம் 125-அதிகாரங்கள் கொண்டது. ஒவ்வொரு அதிகாரத்திலும் 10 ஸூத்ரங்கள் இருக்கின்றன. இதில் வரும் கடின பதங்களுக்கு கடைசியில் உரை சேர்க்கப்பட்டிருக்கிறது. இது ஸுலபமான நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இதன் விலை அணு 8. வேண்டுவோர் மிஸ்டர் வ. உ. சிதம்பரம் பிள்ளை, 40, பரிபூரண விநாயகர் கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை யென்று எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

## SCIENCE AND INVENTION.
## சாஸ்த்ரமும் நூதன கற்பிதமும்.

### Substances Harder than Diamond.

வைரத்தைவிட கெட்டியான பொருள்கள்.—டிடானியம் என்ற ஒரு உலோகம் சிலகாலமாக ரொம்ப உஷ்ணமுள்ள மின்ஸார அடுப்பின் உதவியால் செய்யப்பட்டு வருகிறது. டிடானியம் வெள்ளீயத்தைப்போல இருக்கும். இது சுத்தமாக வேறொரு பொருளோடும் ஸம்பந்தப் படாமலிருந்தால் இரும்பைவிட கெட்டியாக இருக்கும்.

இதோடு ஸிலிகன் என்னும் பொருளைக்கலந்து ஸிலிஸைட் அப் டிடானியம் என்று ஒருபொருள் செய்யப்படுகிறது. இன்னும் போரன் என்னும் பொருளை டிடானியம் என்னும் உலோகத்தோடு கலந்தால் 'போரைட் அப்டிடானியம்' என்னும் பொருள் உண்டாகிறது. இந்த இரண்டு பொருள்களும் அதாவது 'ஸிலிஸைட் அப்டிடானியம்', 'போரைட் அப் டிடானியம்' ஆகிய இவைகள் வைரத்தைவிட கெட்டியாக இருக்கின்றனவாம்.

### Cooking with Newspaper Sheets.

பத்ரிகைகளின் தாள்களைக்கொண்டு சமைத்தல்.—மாம்ஸத்துண்டுகளில் இரண்டொன்றையாவது காய்கறிகளில் கொஞ்சமாவது இரண்டு மூன்று நிமிஷங்களில் பத்ரிகைகளின் தாள்களை எரியவிட்டு பக்வம் செய்வதற்கேற்றதான சமையல் பாத்ரமொன்றை ஒரு ப்ரெஞ்ச் கடைக்காரர் புதிதாய் தயாரித்திருக்கிறார். இந்தப் பாத்ரத்தில் இரண்டு பாகங்கள் உண்டு. ஒவ்வொன்றும் உள்ளே சற்று பள்ளமான, உலோகத்தால்செய்த தட்டமாகும். ஒன்றோடொன்று காற்று உள்ளே போகாதபடி நன்றாய்ப் பொருந்தக்கூடியது. இரண்டிற்கும் பிடியுண்டு. இவைகளில் ஒன்றில் பக்வம் செய்யவேண்டிய ஆகார வஸ்துக்களைப்போட்டு அதில்கொஞ்சம் நெய் அல்லது எண்ணெய் ஊற்றி, மற்ற தட்டால்மூடி அடுப்பின்மேல் வைக்கவேண்டும். பிறகு கடுதாசிகளை நீளமாகக் கிழித்து நீள்வாக்கில் சுருட்டி மூன்று சுருள்கள் தயார்செய்து வைத்துக்கொள்ளவேண்டும். ஒரு சுருளைப் பற்றவைத்து, தட்டத்தின் அடியில் காட்டி தட்டத்தின் அடிப்பக்கம் முழுவதும் நெருப்புப் படும்படி வைத்துக்கொண்டிருக்கவேண்டும். முதல்சுருள் தீர்ந்தவுடன் இரண்டாவது சுருளையும், பிறகு மூன்றாவது சுருளையும் பற்றவைத்துக் கொண்டிருந்தால், மூன்றாவது சுருள்தீர்ந்து போவதற்குள் உள்ளிருக்கும் பொருள்கள் நன்றாய் வெந்து பக்வமாயிருக்கும். ஆகார வஸ்துக்கள் இவ்வளவு சீக்ரம்வெந்து பக்வமானதற்குக்காரண மென்னவென்றால், இரண்டு தட்டங்களும் ஒன்றோடொன்று நன்றாய் இறுகப்பிடித்துக்கொண்டு உள்ளிருக்கும் உஷ்ணத்தை வெளியில் விடுவதில்லை. மாம்ஸம் அல்லது காய்கறிகளில் உள்ள ஈரம் ஆவியாகிறது. உஷ்ணமும் ஆவியும்சேர்ந்து அவைகளை சீக்ரத்தில் வேகவைக்கின்றன. இந்தப் பாத்ரம் வெளியூர்களில் ப்ரயாணம் செய்பவர்களுக்கு மிகவும் ப்ரயோஜனமுள்ளதென்று சொல்லப்படுகிறது.

### House Fly's Range of Flight.

வீட்டு ஈ பறக்கும் தூரம்.—ஸமீபத்தில் இங்கிலண்டில் ஒரு டாக்டர் வீட்டு ஈ எவ்வளவு தூரம் பறக்கும் என்பதைப்பற்றி சில பரீக்ஷைகள் செய்து பார்த்தார். பற்பல சீதோஷ்ண ஸ்திதியிலும், இந்தப் பரீக்ஷைகள் செய்யப்பட்டன. மொத்தம் ஸுமார் 25,000 ஈக்களை பறக்கவிட்டுப் பார்த்தார். அடையாளம் தெரிவதற்காக அந்த ஈக்களின்மேல் மஞ்சள் சீமைசுண்ணம்புப் பொடியாவது, சிவப்புச் சுண்ணம்புச் பொடியாவது தூவியிருந்தார். ஈக்கள் பறந்துபோவதை கவனிப்பதற்காக 50 இடங்கள் ஏற்படுத்தியிருந்தார். அந்த இடங்களில் ஈக்களைப் பிடிக்க உதவும் ப்ளை பேபர் என்னும் பசைக் கடிதத்தில் அவைகளைப் பிடித்துப்பார்த்தார். இந்தப் பரீக்ஷைகளால் ஈக்கள் காற்றுக்கு எதிர்புறமாகவாவது, அதற்கு சற்று சாய்வாகவாவது பறக்கின்றனவென்று தெரியவந்தது. ஈக்கள் ரொம்ப ஜாஸ்தியாகப் பறந்த தூரம் 760 கஜமாகும். திறந்த வெளியில்தான் இவைகள் இவ்வளவுதூரம் போயின. ரொம்ப ஜனநெருக்கமான பட்டணங்களில் ஈக்கள் 30 கஜத்துக்குமேல் போவதில்லையென்று மேல்சொன்ன டாக்டர் எண்ணுகிறார். ஆகாசம் ரொம்ப ப்ரகாசமாயிருக்கும் வேளையில்தான் ஈக்கள் ரொம்ப தூரம் பறந்து போகிறன்றவாம்.

# SANITATION AND MEDICINE.

## ஸுகாதாரமும் வைத்யமும்.

### Constipation.

மலச்சிக்கல்.—மலச்சிக்கல் அநேகமாய் பழக்க வழக்கங்களால் ஏற்படும் வ்யாதியாகும். ஆகார நியமத்தை சரிவர கவனித்து வந்து, காலம் தவருமல் மலோபாதையைக் கழித்து வந்தால் சீக்ரம் இது தானுக நின்று விடும். மலச்சிக்கலுக்கு ரொம்ப ஸாதாரணமான காரணம் சாப்பிடும் உணவின் அளவிலோ, அல்லது தன்மையிலோ ஏதோ குறையிருந்திருப்பதே. இது அநேகமாய் உயர்தர வகுப்பார்களிடத்தில் தான் அதிகமாய் ஏற்படுகிறதென்று சொல்லலாம். நாம் சாப்பிடும் உணவுப் பொருள்களில் சில தேகத்தை போஷிக்க உபயோகப்படா விட்டாலும், குடல்கள் சரிவரத் தங்கள் வேலைகளைச் செய்ய வேண்டி யிருக்கின்றன. இந்த உண்வுப்பொருள்களை நாம் சாப்பிட வேண்டியது அவச்யமாகும். இப்படிப்பட்ட உணவுப் பொருள்களை சாப்பிடாமலிருந்தால் மலத்தின் அளவு குறைந்து போய் மலச்சிக்கல் ஏற்படுகிறது. மேலும் அநேகர் கார்போஹைட்ரேட் என்னும் மாஸத்துப் பொருள் அதாவது அரிசி போன்ற பொருள்களை வேண்டிய அளவு சாப்பிடாமல் அவைகளுக்குப் பதிலாக ப்ரொடீன் என்று சொல்லப்படும் சதை வளர்க்கும் ஸத்துக்கள் அதாவது பருப்பு, மாம்ஸம் முதலியவைகளை அதிகமாகச் சாப்பிடுவதால் தேகத்தில் வேண்டிய அளவு த்ராவகங்கள் உண்டாகாமல் அதனுலும் மலச்சிக்கல் ஏற்படுவதுண்டு.

இன்னொரு முக்ய காரணமும் இருக்கிறது. சோம்பலினுலும் கார்ய அவஸரத்தாலும் மலோபாதை கழிக்க வேண்டிய நேரம் தப்பி கால ஒழுங்கில்லாமல் இஷ்டப்படி செய்து வருவதாலும் மலச்சிக்கல் ஏற்படுவது ஸகஜம்.

### Dimensions of the Body.

தேகத்தின் அளவுகள்.—ஸகல லக்ஷணங்களும் சரியாய் அமைந்தவர்களின் அங்கங்களினுடைய அளவுகளும், நிறையும் இன்னின்ன வென்பதையும், ஸாதாரண ஜனங்களின் ஸராஸரி அளவுகளும் நிறையும் இன்னின்ன வென்பதையும் கீழே கொடுக்கிறோம். இதைப் பார்க்கும் எவரும் தாம் ஸராஸரி அளவுக்கு எவ்வளவு குறைவாய் அல்லது அதிகமாயிருக்கிறார் என்பதையும், எவ்வளவு நிறையும் அளவும் இருக்க வேண்டுமோ அவைகளுக்கு எவ்வளவு குறைவாய் அல்லது அதிகமாய் இருக்கிறார் என்பதையும் அறிந்து ஏற்றத் தாழ்வை சரிப்படுத்திக்கொள்ள முயலலாம்.

| — | ஸராஸரி அளவுகளும் நிறையும். | எல்லா லக்ஷணங்களும் பொருந்தியிருக்க வேண்டுமானுல் இருக்கவேண்டியவை. |
|---|---|---|
| உயரம் ... | 5 அடி 7·6 அங்குலம் | 5 அடி 8·38 அங்குலம் |
| நிறை ... | 141·39 ராத்தல் | 186·29 ராத்தல் |
| மார்பு (சுற்றளவு) ... | 34·81 அங்குலம் | 40·86 அங்குலம் |
| கழுத்து ... | 14 " | 15·50 " |
| இடுப்பு ... | 30 " | 31·69 " |
| கையில் முழங்கைக்கு மேல்பட்ட பாகம் ... | 13·50 " | 15·55 " |
| முன்கை | 10·50 " | 13·46 " |
| தொடை ... | 20·50 " | 24·05 " |
| முழங்கால் ... | 13·79 " | 16·0[illegible] " |

### Pansupari.

தாம்பூலம்.—தாம்பூலம் போட்டுக்கொள்ளும்போது காலையில் பாக்கு அதிகமாகவும், பகலில் சுண்ணும்பு அதிகமாகவும், ஸாயந்திரம் வெற்றிலை அதிகமாகவும் போட்டுவந்தால், மலச்சிக்கல் நீங்கி, பசி தீபனமுண்டாகி சிலேஷ்ம வ்யாதியைப் போக்கி ஸுகத்தை யுண்டுபண்ணும். தாம்பூலம் உண்ணும்போது முதலில் ஊறுகிற நீரை உமிழ்ந்து விடவேண்டும். ஏனென்ருல், முதலில் ஊறுகிற நீரில் விஷமிருப்பதால் அதை வெளிப்படுத்திவிட்டு பிறகு ஊறுகிற நீரை உட்கொண்டால் தேவாம்ருதத்துக் கொப்பாகுமென்று சொல்லப்படுகிறது.

தாம்பூலம் போடும்போது வெற்றிலையின் அடியையும், நுனியையும் நரம்பையும், சுண்ணும்புவைத்த வெற்றிலையையும், சொத்தைப் பாக்கையும் நீக்கிவிடவேண்டும்.—விச்வகர்ம குலோபகாரி.

# LAW.

## சட்டம்.

### Right of Step-mother to Inherit.

மாற்றாந்தாய் வார்ஸாவது.—மிதாக்ஷரச் சட்டத்தின்படி ஒரு மாற்றாந்தாய் தமது சக்களத்தியின் மகனுடைய ஸொத்துக்கு வார்ஸாக முடியாது. மகனுடைய ஸொத்தானது மாற்றாந்தாய்க்குச் சேராமல் ஸர்க்காருக்குச் சேருகிறது.

### Alienation by Hindu Widow.

ஹிந்து விதவை ஸொத்தை பராதீனம் செய்தல்.—ஒரு ஹிந்து விதவை ஸொத்தை பராதீனம் செய்யும் பக்ஷத்தில், பிற்பாடு அனந்தரவார்ஸாக ஏற்பட்டு அந்த பராதீனத்தை ரத்து செய்தாலொழிய, ஸொத்தை வாங்கினவன் அனந்தரவார்ஸல்லாதவனிடத்திலிருந்து விற்பனையான ஸொத்தைப்பெற பாத்யமுண்டு. அப்படி அன்யனிடத்திலிருந்து ஸொத்தைப்பெறுவதற்கு விதவை அவச்யமாய்த்தான் அதை விற்றாளென்று ரூபிக்கவேண்டியது அனுவச்யம்.

### Mortgage Decree.

அடைமான டிக்ரீ.—அடைமான பத்ரத்தின்மேல் வ்யாஜ்யம் செய்து டிக்ரீ பெற்றவன் முதலில் அடைமான ஸொத்தை விற்பனைக்குக் கொண்டுவரவேண்டும். பிறகுதான் கடன்காரனுடைய இதர ஸொத்துக்களின்மேல் ப்ரவேசிக்கலாம். ஆனால், அடைமான ஸொத்தை விற்பனைசெய்ய அடைமானம் வைத்தவனுக்கு பாத்யமில்லை யென்று நன்றாய்த் தெரியும் பக்ஷத்தில், அடைமான ஸொத்தை விற்பனைக்குக் கொண்டுவருவது அனுவச்யம்.

### Gift of Moveable Property.

ஜங்கமஸொத்து தானம் செய்தல்.—ஜங்கம ஸொத்து தானம் செய்வதில், பார்ட்டிகள் பெற்றோர் குழந்தைகள் என்ற பந்துத்வத்திலிருந்தாலுங்கூட, தான ஸொத்தை தானம் வாங்குபவரிடம் சேர்ப்பிக்கா விட்டால் தானம் கொடுத்ததாகாது.

ஒரு கிழவி மேஜரான தனது அபிமான புத்ரிக்கு ஒரு ஜங்கமஸொத்தை தானம் செய்தாள். ஆனால் அந்த ஸொத்து பெண்ணிடம் சேர்ப்பிக்கப்படவில்லை. இரண்டு பேருக்குமுள்ள பந்துத்வத்தில் ஸொத்தைப் பெண்ணிடம் சேர்ப்பிக்கவேண்டியது அவச்யமில்லை யென்று சொல்லக்கூடாது. ஸொத்தைப் பெண்ணிடம் சேர்ப்பிக்காததால் தானம் கொடுத்ததாக மாட்டாது.

### Gifts to Females.

ஸ்த்ரீகளுக்கு தானம் கொடுத்தல்.—ஒரு ஹிந்து விதவை தனது புருஷனுடைய ஸொத்தில் ஒரு சிறு பாகத்தை, குடும்பத்திலிருந்து பிரிந்து போகாத தனது புருஷனுடைய ஸகோதரரின் பெண் ஒருத்திக்கும், அதே ஸகோதரரின் பெண்வயிற்றுப் பேரனுக்கும் தானமாகக் கொடுத்தாள். இரண்டு பெண்களுக்குக்கல்யாணம் நடந்து வெகுகாலமான பிறகு விதவை ஷை ஸொத்தை தானம் செய்தாள் என்றால் அந்த தானங்கள் சட்டப்படி செல்லமாட்டா.

### Panchayat Courts in Travancore.

திருவாங்கூரில் பஞ்சாயத்துக் கோர்ட்டுகள்.—திருவாங்கூர் ராஜ்யத்தில் ஒவ்வொரு க்ராமத்திலும் 5 பஞ்சாயத்தார்களை நியமித்து அவர்கள் கோர்ட்டாக இருந்து 30-ரூபாய்வரை மதிப்புள்ள எல்லா வ்யாஜ்யங்களையும் விசாரித்து தீர்ப்பு செய்யவேண்டுமென்றும், அதற்குமேல் 200-ரூபாய்வரை மதிப்புள்ள வ்யாஜ்யங்களை இரண்டு தரப்பு கக்ஷிக்காரர்களும் ஸம்மதித்தால் ஷை பஞ்சாயத்துக் கோர்ட்டுகளுக்கு விசாரித்து முடிவுசெய்ய அதிகாரம் உண்டென்றும், இரண்டு வர்ஷத்துக் கொருதரம் ஷை பஞ்சாயத்து புதிதாய் நியமனம் செய்யப்பட வேண்டுமென்றும் கவர்ன்மெண்டார் சட்டம் ஏற்படுத்தி யிருக்கிறார்களென்று 'பூர்ண சந்திரோதயம்' எழுதுகிறது.

### Dissolution of Partnership.

பாகஸ்தர்கள் பிரிவினையாவது.—ஒன்றாக இருந்துவந்த பாகஸ்தர்கள் பிரிவினை செய்துகொண்டால் அதற்குப்பிறகு பாகஸ்தர்களில் ஒருவர் மற்றவர்களுடைய நேரிடையான அனுமதியில்லாமல் மற்றவர்களைக் கட்டுப்படுத்தக்கூடிய கடன்களை ஒப்புக்கொள்ளக்கூடாது.

### Women & Pujari Service.

ஸ்த்ரீகளும் பூசாரி வேலைகளும்.—ஸ்த்ரீகள் கோவிலில் பூஜைசெய்யும் உத்யோகத்தை அடைந்து, அந்த வேலையை வேறொருவரைக்கொண்டு செய்யச்சொல்லலாம். இந்தவழக்கம் சட்டத்துக்கு விரோதமானதல்ல.—1 லா-வீக்லி 900.

# PERSONAL NOTES.
## மனிதர்களைப்பற்றிய குறிப்புகள்.

### Maharaja Of Idar.

இடார் மஹாராஜா.—இடார் என்னும் ஸம்ஸ்தானம் பம்பாய் ராஜதானியில் பரோடா ராஜ்யத்துக்கு வடக்சேயுள்ளது. இதன் விஸ்தீரணம் 1669 சதுர மைலாகும். ஜோட்பூர் ஸமஸ்தானத்து ரீஜண்டாகிய மேஜர் ஜெனரல் ஸர் ப்ரதாப ஸிங்கினுடைய புத்ரர் இதன் மகாராஜாவாக இருக்கிறார். இவர் யுத்தத்துக்குப் போயிருக்கிறார். இவரோடு இவருடைய ஸர்தார்களில் ஒன்பது பேரும், ஸமஸ்தானத்து இம்பீரியல் ஸெர்விஸ் துருப்புகளில் ஒரு பாகமும் போகிறார்கள்.

### Lieutenant Hardinge.

லெப்டினண்ட் ஹார்டிஞ்ஜ்.—நமது வைஸ்ராயின் புத்ரர்களில் ஒருவராகிய ஆனரபிள் லெப்டினண்ட் இ. வி. ஹார்டிஞ்ஜ் என்பவர் யுத்தத்தில் காயமடைந்து ஆஸ்பத்ரியில் இருக்கிறார் என்று ஸெப்டம்பர் மாஸத்து ஸஞ்சிகையில் தெரிவித்தோம். அவர் ரொம்ப தைர்யமாயும் ஸாமர்த்யமாயும் கஷ்டத்தைக்கவனிக்காமலும், எதிரிகளினுடைய மெஷீன் பீரங்கிகளின் குண்டுகள் பக்கத்தில் விழுவதை லக்ஷ்யம் செய்யாமலும், எதிரிகளின் நிலைமையையும் அவர்களிருக்குமிடத்தையும் தெரிந்து வருவதற்காக தொடர்ச்சியாய் மூன்றுநாள் வெளியில் போயிருந்தாராம். அப்போதுதான் அவருக்குக் காயமேற்பட்டது. அவர் ரொம்ப ஸாமர்த்யமாக வேலை பார்த்ததற்காக நமது அரசர் அவருக்கு "டிஸ்டிங்க்விஷ்ட் ஸெர்விஸ் ஆர்டர்" என்னும் பட்டம் கொடுத்திருக்கிறார். அந்தப் பட்டத்தின் தாத்பர்யம் ச்லாகிக்கத்தக்க வேலை செய்ததற்காக பட்டம் என்பது.

### Lord Roberts.

லார்ட் ராபர்ட்ஸ்.—லார்ட் ராபர்ட்ஸ் மிகவும் ப்ரஸித்திபெற்ற வீரர்களில் ஒருவராவார். இவர் 1832-வர்ஷத்தில் வட இந்தியாவிலுள்ள கான்பூரில் பிறந்தார். 18-வது வயஸில் பெங்கால் ஆர்ட்டிலரியென்னும் பீரங்கிப்படையில் சேர்ந்தார், 1857-ம் வர்ஷம் நடந்த சிபாய் கலகத்திலும் 1879-80-ம் வர்ஷத்தில் ஆப்கன் யுத்தத்திலும் யுத்தம் செய்திருக்கிறார்.

1881-ம் வர்ஷம்முதல் 1885-ம் வர்ஷம் வரையில் மதராஸ் ஸைன்யத்தின் தலைவராகவும், 1885-ம் வர்ஷம் முதல் 1893-ம் வர்ஷம் வரையில் இந்திய ஸைன்யங்களின் தலைவராகவும் இருந்தார். போயர் யுத்தத்தில் இவர் ஸேனாதிபதியாக இருந்து யுத்தம் செய்தார். இவர் 1901-ம் வர்ஷமுதல் 1904-ம் வர்ஷம் முடிய ப்ரிட்டிஷ் ஸைன்யத்தின் தலைவராக இருந்தார். இவர் இந்த யுத்தத்துக்கு ஸைன்யங்கள் சேகரிப்பதை மேற்பார்வை பார்த்து வந்தார்.

எல்லா ப்ரஜைகளுக்கும் கட்டாயப்படுத்தி ராணுவப் பயிற்சி செய்விக்க வேண்டுமென்பது இவரது கொள்கை. இவர் ஸமீபத்தில் தாம் ஸேனாதிபதியாயிருந்த இந்திய ஸைன்யங்கள் யுத்தம் செய்வதை நேரில் பார்க்கவேண்டு மென்று ப்ரான்ஸுக்குப் போயிருக்கையில், ஒரு குன்றின் மேலிருந்து மேலே குளிருக்கு அடக்கமான சட்டையைப் போட்டுக் கொள்ளாமல் பனியில் நின்று கொண்டு யுத்தத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் ந்யூமோனியா என்னும் ஈரல்நோய் கண்டு நவம்பர்மீ 15உ இறந்துபோனார்.

### Minister's Sons at the Front.

போர்முனையில் மந்த்ரிகளின் புத்ரர்கள்.—இந்த யுத்தத்தில் அநேக பார்லிமெண்ட் மெம்பர்களும் ப்ரமுகர்களும் போர்முனைக்குப் போயிருக்கிறார்கள். மந்த்ரிகளின் புத்ரர்களும் சண்டைசெய்யப் போயிருக்கிறார்கள். இங்க்லண்டின் ப்ரதம மந்த்ரியாகிய மிஸ்டர் ஆஸ்க்வித்தினுடைய புத்ரர் ஆண்ட்வெர்ப் பட்டணம் முற்றுகை போடப்பட்டபோது யுத்தம் செய்து கொண்டிருந்தாராம். வரவு செலவு மந்த்ரியாகிய மிஸ்டர் லாய்ட் ஜார்ஜின் புத்ரர்களில் இருவர் யுத்தத்துக்குப் போயிருக்கிறார்கள். இவர்களிருவரும் ஸைன்யத்தில் லெப்டினண்ட் என்னும் பதவியிலிருந்து வருகிறார்கள்.

### German Royal Families.

ஜெர்மன் ராஜ வம்சங்கள்.—ஜெர்மனியிலுள்ள ராஜ வம்சங்களைச்சேர்ந்த எட்டு ராஜ குமாரர்கள் யுத்தத்துக்குப்போய் சண்டைசெய்து இறந்து விட்டார்களாம். இவர்களில் ஒருவர் ஜெர்மன் சக்ரவர்த்திக்கு நெருங்கின பந்துவாம். இந்த 8-பேர்களில் 6-பேர் 22-வயஸுக்குக் கீழ்ப்பட்டவர்களாம்.

# SOCIETY AND RELIGION.

## ஜனஸமூகமும் மதமும்.

### Institution for Defectives.

ஊனமுள்ளவர்களுக்கு பள்ளிக்கூடம்.—மைஸூரில் ஊமை செவிடு, குருடு முதலிய ஊனமுள்ளவர்களுக்காக 1901-ம் வர்ஷத்தில் ஒரு பள்ளிக்கூடம் ஸ்தாபிக்கப்பட்டு நாளது வரையில் அது நன்றாய் நடந்து வருகிறது. அது ஆரம்பமான வர்ஷத்தில் முதலில் ஒரு ஊமையும் இரண்டு குருடர்களும் சேர்ந்தார்கள். இப்போது அந்தப் பள்ளிக்கூடத்தில் 16 ஊமைச் செவிடும், 25 குருடர்களும் சேர்ந்து வாசித்து வருகிறார்கள்.

இதுவரையில் 35 செவிடர்கள், 48 குருடர்கள், 83-வேறு ஊனமுள்ளவர்கள் ஆகிய இத்தனை பேர்கள் அந்தப் பள்ளிக்கூடத்தில் படித்து தொழில்களில் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். இவர்களில் அநேகர் ஸங்கீத போதகர்களாகவும், கைத்தொழில் ஸ்கூல்களில் போதகர்களாகவும் இருக்கிறார்கள்.

அந்தப் பள்ளிக்கூடத்தில் பிரம்பு வேலை, நெசவு, ஸங்கீதம், வ்யாபாரம், தையல் வேலை, சித்ரவேலை, ஆகிய இவைகள் கற்பித்து வருகிறார்கள். இந்த ஸ்கூல் ரொம்ப செட்டாக நடந்து வருகிறதாம். இதற்கு மாஸச் செலவு ரூ. 300 தானும். இதில் 110 ரூபாய் மைஸூர் கவர்ன்மெண்டார் கொடுத்து உதவி வருகிறார்கள்.

### Lepers and the War.

குஷ்ட ரோகிகளும் யுத்தமும்.—இந்தியாவில் குஷ்டரோகிகளை ஸம்ரக்ஷிப்பதற்காக ஒரு மிஷன் (ஸங்கம்) இருக்கிறது. இது இங்க்லீஷ்காரர்களால் நடத்தப்பட்டு வருகிறது. இதற்கு செலவுக்கு வேண்டிய பணத்தை இங்க்லீஷ் முதலிய மேல் நாட்டு ஜனங்களே கொடுத்து உதவி வருகிறார்கள். இப்போது ஐரோப்பாவில் யுத்தம் நடந்து வருவதால் மேல் நாட்டார் அதிக பணம் கொடுத்து உதவ முடியாதென்று சொல்லப்படுகிறது. இந்த மிஷனுக்கு 40 இடங்களில் கிளைகள் இருக்கின்றன. 3800 குஷ்டரோகிகள் இந்த மிஷனின் ஸம்ரக்ஷணையிலிருந்து வருகிறார்கள். இவர்களுக்குச் செலவுக்காக தினம் 1000 ரூபாய் வேண்டியிருக்கிறது. அதாவது வர்ஷத்தில் 3½ லக்ஷம் ரூபாய்க்குமேல் இவர்களுக்காக செலவழிக்கப்பட்டு வருகிறது.

இந்த யுத்தத்தில் ப்ரிட்டிஷ் ஜனங்கள் கொடுக்கும் பணம் குறையக்கூடுமாகையால் இந்தியர்கள் முன்பு தென்னாப்ரிக்கா இந்தியர்களின் கஷ்ட நிவர்த்திக்காகப் பணம் கொடுத்து உதவினதுபோல தங்கள் தேசத்திலேயே இருக்கும் இந்த அநாதைகளுக்காக பொருளுதவி செய்ய முன் வரவேண்டியது அவச்யமாகும்.

இந்த ஸங்கத்துக்கு ராஜா ஸர் ஹர்நாம்ஸிங் என்பவர் வைஸ் ப்ரெஸிடெண்டாக இருக்கிறார்.

### Pandas of Brindaban.

ப்ருந்தாவனத்தில் பண்டாக்கள்.—நமது நாட்டில் புரோகிதம் செய்துவரும் ப்ராம்மணர்களைப்போல ப்ருந்தாவனத்தில் பண்டாக்கள் என்று பெயருள்ள சில வைதீகர்கள் இருக்கிறார்கள். இவர்கள் தங்களுடைய தொழிலைச் செய்வதற்கு அந்த ஊர் முனிஸிபாலிடியிலிருந்து அனுமதி பெறவேண்டுமென்றும், வர்ஷந்தோறும் தலைக்கு 5-ரூபாய் வரி செலுத்த வேண்டுமென்றும், முனிஸிபாலிடியின் இந்த உத்தரவை மீறி நடப்பவர்களுக்கு 50-ரூபாய் அபராதம் போடப்படுமென்றும் முனிஸிபாலிடியார் உத்தரவு செய்திருக்கிறார்களாம். பண்டாக்கள் ப்ருந்தாவனத்திற்கு வரும் யாத்ரிகளிடம் கோவிலை தர்சிப்பதற்காக பணம் வாங்குவதுண்டாம்.

### Religious Instruction & Jail Convicts.

ஜெயில் கைதிகளுக்கு மதபோதனை.—திருவாங்கூர் கவர்ன்மெண்டார் திருவனந்தபுரம் ப்ரும்மஞான ஸங்கத்து மெம்பர்களில் சிலருக்கு திருவனந்தபுரம் ஸெண்ட்ரல் ஜெயிலிலுள்ள கைதிகளுக்கு மத விஷயங்களையும் ஸன்மார்க்க விஷயங்களையும் கற்பித்துவர அனுமதி கொடுத்திருக்கிறார்கள்.

### Vedanta.

வேதாந்தம்.—வேதாந்தத்தைப்பற்றி பேசுகையில் அது சிறந்த தத்வம் என்றும், அது எல்லாரும் ஒப்புக்கொள்ளும் மதமென்றும் பெரிய வித்வானாகிய ப்ரொபஸர் மாக்ஸ்மூல்லர் என்பவர் எழுதியிருக்கிறார். இனிமேல் பொதுஜனங்கள் நல்ல நடத்தையுள்ளவர்களாயிருப்பதற்கு அது தக்க ஸாதனமாயிருக்குமென்று டாக்டர் டாயிஸின் என்னும் ஒரு ஜெர்மன் வித்வான் சொல்லியிருக்கிறார்.

# HINTS AND RECIPES.
## யுக்திகளும் முறைகளும்.

### A New Use For Sugar.

சர்க்கரைக்கு ஒரு புது உபயோகம்.—ஸாதாரணமாய் ஸோப்புகளைத்தான் கைகளை அலம்ப உபயோகிப்பது வழக்கம். இவைகள் க்ருமிகளைக் கொல்லக் கூடியவையென்று சொல்லப்படுகிறது. ஆனால் புண்களைக் கழுவுவதற்கும், வைத்யர்கள் கையைக் கழுவுவதற்கும் மணல் மணலாயுள்ள சர்க்கரையை உபயோகிக்கலாமென்றும், சவர்க்காரங்கள் இதைவிட ச்லாக்யமானவை யல்லவென்றும், இந்த சர்க்கரையைக்கொண்டு கைகளைக் கழுவினால் சவர்க்காரத்தைப் போல் கைகளுக்கு ஒருவிதச் வறட்சியைஉண்டுபண்ணாமல் கைகளை ம்ருதுவாகவும் சுத்தமாகவும் ஆக்கிவிடுகிறதென்றும் ஒரு டாக்டர் தெரிவிக்கிறதாக 'வைத்திய கலாநிதி' எழுதுகிறது. பெரிய மனிதர்கள் வீட்டில் நெய் சேர்ந்த பதார்த்தங்கள் சாப்பாட்டில் அதிகமாகச் சேர்ந்திருந்தால் கையில் நெய்ப்பசை யதிகமாயிருக்குமாகையால், கையலம்புவதற்கு முன் சர்க்கரையைப்போட்டுத் தேய்த்து அலம்புவது வழக்கமென்பது நமது நேயர்களுக்கு தெரிந்திருக்கும்.

### Ink Stains in Carpets.

ஜமக்காளங்களில் இங்கிக் கறைகள்.—ஜமக்காளங்களில் இங்கிக் கறைகள் விழுந்தால் பின் வருமாறு செய்யவும். ஒரு எலுமிச்சம் பழத்தை இரண்டாக நறுக்கி, அந்தத் துண்டுகளைக் கொண்டு கறைகளின்மேல் தேய்க்க வேண்டும். தேய்த்த பிறகு ஒரு ம்ருதுவான துணியால் துடைக்கவும். அப்பொழுதும் கறை விடாவிட்டால் எலுமிச்சம் பழத்தை உப்பில் தோய்த்து கறைகளின்மேல் தேய்க்கவும்.

### To Remove Paint.

வர்ணத்தைப் போக்க.—மரஸாமான்களில் வர்ணம் பூசியிருந்து அதை எடுத்துவிட வேண்டுமானால் பின் வருமாறு செய்யவேண்டும்.

ஒரு ராத்தல் காஸ்டிக் பொடாஷ் என்னும் மருந்தை 40 ஔன்ஸ் அஸிடோன் (Acetone) என்னும் மருந்தில் கரைத்து, அதோடு 20 ஔன்ஸ் மிதிலேடட் ஸ்பிரிட்டும், 20 ஔன்ஸ் ஸ்பிரிட்ஸ் அப் பெட்ரோலியமும், 10 ஔன்ஸ் விளக்கெண்ணெயும் சேர்த்துக் கலக்கி வைத்துக்கொள்ள வேண்டும். இந்த மருந்தால் மரத்தில் பூசி யிருக்கும் வர்ணத்தில் தடவி பழைய கந்தையால் துடைத்து வர்ணத்தைப் போக்கவேண்டும். வர்ணம் ரொம்ப கெட்டியாக இருந்தால், முதலில் மழுங்கலான கத்தியால் வர்ணத்தைச் சீவி யெடுத்துப் பிறகு மருந்தைத் தடவி சுத்தம் செய்துவிடலாம்.

### Uses of Vinegar.

காடியின் உபயோகங்கள்.—புகையடைந்த மரவேலைகளை சுத்தம் செய்ய ப்ளானல் துணியைக் காடியில் நனைத்துத் தேய்க்கவேண்டும்; ஒரு தடவை உபயோகித்த ப்ளானல் துணியை மறுபடியும் உபயோகிக்கவேண்டியிருந்தால் அதை ஜலத்தில் நனைத்து அலசி யெடுக்கவேண்டும். மரஸாமான்கள், கண்ணாடிகள்,ஜன்னல்கள் ஆகிய இவைகளில் கையழுக்குப்பட்டாலும், அல்லது வேறு அழுக்குகள் படிந்திருந்தாலும் கொஞ்சம் காடியை ஊற்றித் துடைத்து எடுத்துவிடலாம். ட்ரௌஸர்ஸ் (கால் சட்டை)களின் அடிமடிப்புகள் பூட்ஸுகளில் போட்டிருக்கும் 'பாலிஷ்'களில் பட்டு நிறங்கெட்டுப் போவதுண்டு. இதையும் காடியால் சுத்தம் செய்துவிடலாம்.

### Broken Bottles.

உடைந்த ஸீஸாக்கள்.—உடைந்த ஸீஸாக்கள், அல்லது கண்ணாடி ஜாடிகளின் மேற்பாகத்தை மற்ற பாகத்துக்கு சேதம் ஏற்படாமல் அறுத்து எடுக்க வேண்டுமானால், எந்த பாகத்தோடு அறுக்கவேண்டுமோ அந்த பாகத்தைச்சுற்றி டர்ப்பண்டைன் எண்ணெயில் நனைத்த ஒரு நூலைச் சுற்றிவைக்கவும். நூலின் மட்டத்துக்கு ஸீஸாவில் ஜலம் ஊற்றவும். பிறகு நூலில் நெருப்புப் பற்றவைக்கவும். அநேகமாய் நூல் சுற்றியிருந்த இடத்தோடு கண்ணாடி விரிந்துபோகும். விரிந்த ஸீஸா அல்லது ஜாடியின் அடிப்பாகத்தை பூந்தொட்டிகளாக உபயோகிக்கலாம்.

### Blisters in Walking.

நடக்கும்போது காலில் கொப்புளம் உண்டாவது.—வெகுதூரம் நடந்துபோக வேண்டியிருந்தால், கொஞ்சம் ஸோப்பை ஜலத்தில் நனைத்தெடுத்து ஸ்டாக்கிங்ஸின் (மேஜோடு) உள்புறத்தில் பாதத்தின் பாகத்திலும் கணுக்காலின் பாகத்திலும் நன்றாய்த் தேய்த்து அதை உலரவைத்து, பிறகு அதைப் போட்டுக்கொண்டு நடந்தால் கால்களில் கொப்புளங்கள் உண்டாகமாட்டா.

## AGRICULTURE.
## விவஸாயம்.

### Soil Survey in Tanjore District.

தஞ்சாவூர் ஜில்லாவில் நிலப் பரிசோதனை.—கோயம்புத்தூர் விவஸாய ரஸாயன சாஸ்த்ரி ஸமீபத்தில் தஞ்சாவூர் ஜில்லா நிலங்களின் தன்மையைப் பரிசோதித்து அதைப் பற்றி ஒரு சிறு புஸ்தகம் வெளியிட்டிருக்கிறார். அதிலுள்ள விஷயங்கள் சுருக்கமாய்ப்பின் வருமாறு.

i. தஞ்சாவூர் தாலுகா தோகூரிலிருந்து பாபனாசம் தாலூகா வேளூர் வரைக்கும் சுமார் 6 முதல் 10 மைல் வரையில் கொள்ளிடத்திற்கு அருகாகவும், மாயவரம் தாலூகா பெருஞ்சேரியிலிருந்து கும்பகோணம் தாலூகா கஞ்சனூர் வரைக்கும் ஒரு குறுகலான பூமியில் பாஸ்பாரிக் ஆவிட் (Phosphoric acid) போதுமான அளவு இருக்கிறது. மற்ற எந்த இடத்திலும் குறைவாகத்தான் இருக்கிறது; விசேஷமாய் (1) மன்னார்குடிக்கு மேற்கிலிருந்து நாகப்பட்டணம் ரயில்வே பாதைக்கு தெற்கேயும், (2) நன்னிலம் நாகப்பட்டணம் தாலூகாக்களிலும் (3) மாயவரத்திலும் சீயாழி தாலூகா மேற்பாதியிலும் குறைவாக இருக்கிறது.

ii. டெல்டா நிலங்களில் அநேக பாகங்களில் பொடாஷ் (Potash) அதிகமாயிருக்கிறது. கீழ் குறிப்பிட்டிருக்கிற இடங்களில்குறைவாக இருக்கிறது.

(1) சீயாழி தாலூகாவில் மேல்பாகம்; (2) கும்பகோணம் தாலூகாவின் கடிச்சம்பாடியிலிருந்து செல்லூர் வரையிலும்; நன்னிலம் தாலூகாவில் சென்னாங்காரிலும்; மேற்கூறிய மூன்று க்ராமத்திற்கும் வடக்கே 10 மைலிலிருந்து 20 மைல் வரைக்கும் அகலமாயுள்ள நிலம்; (3) தஞ்சாவூர் தாலூகாவில் மாடிசையிலிருந்து மன்னார்குடி தாலூகா பெருவழந்தான் வரைக்கும் ஒரு நிலம், அதாவது புஞ்சை பாகங்களை சுற்றி.

iii. ஆகையினால், டெல்டா நிலங்களுக்கு பாஸ்பாரிக் ஆஸிட் வேண்டியிருக்கிறது. முக்யமாய் ii-வது பாராவில் சொல்லப்பட்ட மூன்று பாகங்களுக்கும் பொடாஷ் வேண்டும், மற்ற பாகங்களுக்கு வேண்டியதில்லை.

iv. கொள்ளிடக் கரையிலுள்ள சில இடங்களைத் தவிற மற்ற இடங்களில் நைட்ரோஜன் (Nitrogen) கொஞ்சம் குறைச்சலாகவே இருக்கிறது.

5. டெல்டாவுக்கு வடபாதியிலும் நாகபட்டணத்தில் கோவில்கண்ணாப்பூரிலிருந்து முத்துப்பேட்டை வரைக்கும் கீழ்பக்கத்திலும் உள்ள நிலங்களுக்கு சுண்ணாம்பு போடுவதினால் அநேகமாய் குணம் அடையலாம்.

6. மேலே சொல்லப்பட்டவைகள் சற்றேறக் குறைய பழக்கத்திற்கு நிற்கும். என்ன எருக்கள் போட்டால் சரியான பலன் கிடைக்குமென்று நமக்கு இதுவரையிலும் தெரியவில்லை. ஆனால் டெல்டாவில் அநேக பாகங்களில் நிலத்திற்கு பொடாஷ் சேர்ப்பது பணச்சேதமென்றும் முதலில் முக்யமாய் பாஸ்பாரிக் ஆவிடும் நைட்ரொஜனும் உள்ள இந்த எருக்களைக்கொண்டு பரீக்ஷை செய்யவேண்டுமென்றும் இந்த ஸர்வேயினால் தெரிகிறது.

### Fowls and Egg Production.

கோழிகளும் முட்டையிடுதலும்.—கோழிகள் முட்டையிடும் பருவத்தில் அவைகள் இரவில் தங்கியிருக்க நல்ல கூடுகள் இருக்கவேண்டியது அவச்யம். பகலில் வெயில் அல்லது மழை அதிகமாயிருந்தால் அவைகள் தங்குவதற்கு வேண்டிய ஸௌகர்யங்கள் செய்து வைக்கவேண்டும். ஸாதாரணமாய் விவஸாயிகள் மற்ற கால்நடைகள் முதலிய ப்ராணிகள் விஷயத்தில் அவைகள் தங்கியிருக்க இடவஸதிகள் ஏற்படுத்த ச்ரத்தை யெடுத்துக்கொள்வதுபோல் கோழிகள் விஷயத்தில் ச்ரத்தை யெடுத்துக்கொள்வது அபூர்வமென்று சொல்லப்படுகிறது. மழை, வெயில் அல்லது குளிர் அதிகமாயிருக்கும் காலங்களில் கோழிகள் தங்களைத் தாங்களே காத்துக்கொள்ளும்படி வேண்டிய அளவு இறகுகள் அவைகளினுடைய தேகத்தில் அமைந்திருக்கின்றனவென்று சொல்லி யாதொரு தக்க ஸௌகர்யமும் செய்யாமலிருப்பது சரியல்ல. ஏனென்றால் ரொம்ப மழை, குளிர் அல்லது வெயிலில் கோழிகள் இருக்க நேர்ந்தால் அவைகள் தேகத்திலுள்ள இறகுகள் வெயில் அல்லது குளிர் தேகத்தை கெடுக்காதபடி முற்றிலும் தடுக்க முடியாது. இது விஷயத்தில் போதுமான அளவு கவனம் செலுத்தாவிட்டால், கோழிகள் பலக்குறைவடைந்து விடும்,

# CO-OPERATION.
## கோவாபரேஷன்.

**Supply of Agricultural Implements.**

விவஸாயக் கருவிகள் ஸப்ளை செய்தல்.—ஸமீபத்தில் நடந்த பூனா கோவாபரெடிவ் கான்பரென்ஸில் ஒரு மெம்பர் கோவாபரேஷன் முறையில் விவஸாயக்கருவிகள் ஸப்ளை செய்வதைப்பற்றி ஒரு வ்யாஸம் வாசித்தார். அதில் அவர் சில ப்ரேரணைகள் சொல்லி யிருக்கிறார். அவைகள் பின்வருமாறு.

(1) திருந்திய விவஸாயக் கருவிகளை ஜனங்களிடம் பரவச்செய்ய கோவாபரெடிவ் ஸங்கங்களை தக்க ஸாதனமாக உபயோகிக்கலாம். விவஸாய டிபார்ட்மெண்டார் உபயோகிக்கத் தகுந்தவையென்று சொல்லும் கருவிகளை வாங்கிவைத்து மெம்பர்களுக்கு விற்றுவரும்படி ஸங்கங்களைத் தூண்டுவது நல்லது.

(2) விவஸாய டிபார்ட்மெண்டார் பரீக்ஷித்துத் தகுந்தவையென்று சொல்லும் விவஸாயக் கருவிகளை, அவைகள் ஜனங்களிடம் பரவுவதற்காக, ஆரம்பத்திலாவது ஸங்கங்களுக்கு வாங்கின விலைக்கு விற்று வரவேண்டும்.

(3) கோவாபரெடிவ் ஸங்கங்களின் ரெஜிஸ்ட்ரார் எந்த கோவாபரெடிவ் ஸங்கத்துக்காவது விவஸாயக் கருவிகள் வாங்குவதற்கு அனுமதி கொடுத்தால் அந்த ஸங்கத்தைச்சேர்ந்த மெம்பர்களின் கார்யங்களுக்கு ஏற்றதான கருவிகளை அந்த ஸங்கம் வாங்கிக் கொள்ளுகிறதா என்று பார்க்க (விவஸாய டிபார்ட்மெண்டார்) ஒரு விவஸாய ஒவர்ஸீயரை அதாவது இன்ஸ்பெக்டரை அனுப்பிவைக்கவேண்டும்.

(4) ஸங்கங்கள் வாங்கின கருவிகள் எவ்விதம் விவஸாய வேலைகளுக்கு உதவி வருகின்றன என்பதைமேற்பார்வைசெய்யவும், அது விஷயமாய் யோசனைகள் சொல்லவும் விவஸாய டிபார்ட்மெண்டார் வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

(5) விவஸாய டிபார்ட்மெண்டார் தாம் பரீக்ஷை செய்து பார்க்கும் புதுக் கருவிகளைப் பற்றிய அனுபோகங்களை ஸங்கங்களுக்கு அடிக்கடி தெரிவிப்பதோடு, இன்ன கருவிகளை விவஸாயிகள் உபயோகிக்கலாமென்றும் தெரிவிக்க வேண்டும்.

(6) ரெஜிஸ்ட்ராருக்கு உசித மென்று தோன்றினால், உபயோகமுள்ளவையென்று விவஸாய டிபார்ட்மெண்டார் சொல்லும் கருவிகளை ஸங்கங்கள் தங்கள் ரிஸர்வ் பண்டிலிருந்து வாங்கிக்கொள்ள அவைகளுக்கு அனுமதி கொடுக்கவேண்டும்.

**A Co-operative Building Society.**

ஒரு கோவாபரேடிவ் கட்டிட ஸங்கம்.—உதக மண்டலத்தில் ஜன நெருக்கம் ரொம்ப அதிகமாகிக் கொண்டு வருவதையும், வீட்டு வாடகை ரொம்ப ஜாஸ்தியாய்க்கொண்டு வருவதையும், அதனால் கோடைகாலத்தில் அங்கேபோக விரும்புகிறவர்களில் அநேகருக்கு வீடு கிடைக்காமல் கஷ்டமாயிருப்பதையும்உத்தேசித்து அவ்வூரிலுள்ள அநேகர் ஸமீபத்தில் ஒருமீட்டிங் கூடி பின் வருங் கார்யங்களுக்காக ஒரு கோவாபரெடிவ் கட்டிட ஸங்கம் ஏற்படுத்துவதாகத் தீர்மானித்தார்கள். (1) ஸங்கத்துக்காக கட்டிடங்கள் கட்டுவதும், ஸங்கத்தின் ஸொந்தத்தில் கட்டிடங்கள் விலைக்கு வாங்குவதும். (2) மெம்பர்களுக்கு வீடு கட்டுவதற்கும் ரிபேர் செய்வதற்கும் பணம் கடன் கொடுத்தல். (3) ஸங்கத்தின்மெம்பர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுத்தல். (4)பொதுஜன உபயோகத்துக்குவேண்டியிருக்கும் கட்டிடங்கள் கட்டுதல். (5) ஜலம் ஸப்ளை செய்வதற்கான பைப் வேலைகளை செய்து அவைகளை நிர்வகித்து வருவது ; பாசனவேலைகளை நடத்துவது. (6) வீடுகள் கட்டுவதில் முனிஸிபாலிடியாருக்கு உதவியாயிருப்பது.

**A Co-operative Press Society.**

ஒரு கோவாபரேடிவ் அச்சடிக்கும் ஸங்கம்.—ஸமீபத்தில் நடந்த ஐக்ய மாகாணங்கள் கோவாபரெடிவ் கான்பரென்ஸில் 40,000 ரூபாய் முதலோடு ஒரு கோவாப ரெவ் அச்சடிக்கும் ஸங்கம் ஸ்தாபிக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார்கள். இந்த ஸங்கத்தின் நோக்கங்கள் பின் வருமாறு. மற்ற ரெஜிஸ்டரான கோவாபரெடிவ் ஸங்கங்களுக்கு அச்சடிக்கும் விஷயமாக ஸௌகர்யங்கள் செய்து கொடுத்தல் ; ஒரு கோவாபரெடிவ் பத்ரிகை வெளியிட்டு அதன் மூலமாய் ஜனங்களுக்கு கோவாபரேஷன் கொள்கைகளையும் முறைகளையும் பரவச் செய்தல்; ஒரு பண்டக சாலை ஏற்படுத்துதல்; கோவாபரெடிவ் ஸங்கங்களுக்கு எழுதுவதற்கு உதவும் ஸாமான்கள் ஸப்ளை செய்தல் ஆகிய இவைளாகும்,

# COMMERCE.
# வ்யாபாரம்.

### Business Enterprise.

இந்தியாவில் வ்யாபார ஊக்கம்.—இந்தியாவில் சென்ற ஜுலை ஆகஸ்ட் மாஸங்களில் அடியில் கண்ட விவரப்படி கம்பெனிகள் ரெஜிஸ்டர்செய்யப்பட்டன.

ஜுலை மாஸம்.

| | | |
|---|---|---|
| 1 | பாங்கி லேவாதேவி கம்பெனி | 5,00,000 |
| 1 | இன்ஷுரென்ஸ் கம்பெனி | 10,000 |
| 1 | அச்சிட்டு ப்ரசுரம் செய்யும் கம்பெனி | 50,000 |
| 4 | வ்யாபாரக் கம்பெனிகள் (மேலே சொன்னவை தவிர) | 3,95,000 |
| 2 | கம்பெனிகள் (மேலே சொன்னவை தவிர) | 2,25,000 |
| 9 | | 11,80,000 |

ஆகஸ்ட் மாஸம்.

| | | |
|---|---|---|
| 1 | பாங்கி லேவாதேவி கம்பெனி | 1,00,000 |
| 1 | இன்ஷுரென்ஸ் கம்பெனி | 20,000 |
| 3 | வ்யாபாரக் கம்பெனிகள் | 4,25,000 |
| 1 | அரிசி மில் கம்பெனி. | 12,000 |
| 2 | தேயிலைத்தோட்டக் கம்பெனிகள் | 7,50,000 |
| 1 | நிலம், கட்டிடக் கம்பெனி | 1,00,000 |
| 1 | கம்பெனி (மேலே சொன்னவை தவிர) | 2,50,000 |
| 10 | | 16,57,000 |

### Fruit Bottling.

பழங்களைக் குப்பிகளில் அடைத்துவைத்தல்.—பழங்களைக் குப்பிகளில் அடைத்து பத்ரமாய் வைப்பதற்கு பின்வரும் முறை தகுந்தது. வாயகன்ற குப்பிகளை எடுத்து நன்றாய் சுத்தம் செய்யவேண்டும். எந்தப் பழத்தை பத்ரப்படுத்தவேண்டுமோ அதை நன்றாய்ப் பழுத்ததாகப் பார்த்துப் பறித்து வைத்துக் கொள்ளவேண்டும். பழங்கள் சுத்தமாயும், ஈரமாயில்லாமலும் இருக்கவேண்டும். இந்தப்பழங்களை குப்பிகளில்வைத்து சுத்த ஜலம்விட்டு குப்பிகளை நிரப்பவேண்டும். ஆப்பிள், பேரிக்காய் ஆகிய பழங்களில் பெரியவைகளை நான்காக துண்டுசெய்து கொள்ளலாம். பிறகு ஒரு அகன்ற பாத்ரத்தை அடுப்பிலேற்றி அந்த பாத்ரத்தில் வீஸாக்களைவைத்து, வீஸாக்களின் கழுத்தளவுக்கு வரும்வரையில் பாத்ரத்தில் ஜலம்ஊற்றி, பாத்ரத்திலுள்ளஜலத்தை(நிழல்போலெரியவிட்டு) க்கொதிக்க வைக்கவேண்டும். 20 நிமிஷம் அல்லது அரைமணிநேரம் ஜலம் கொதித்தபிறகு, வீஸாக்களிலுள்ள ஜலமும் கொதித்துக்கொண்டிருக்கும். பிறகு வீஸாக்களை வெளியிலெடுத்து அவைகளிலுள்ள ஜலத்தின் கொதி அடங்குவதற்குள்ளேயே கார்க்குகளைப்போட்டு மூடிவிடவேண்டும். கார்க்குகளை உபயோகிக்குமுன் அவைகளை ஜலத்தில்போட்டு சற்றுக்கொதிக்க வைக்கவேண்டும். கார்க்குகளைப் போட்டு மூடினவுடன் மேலே அரக்குவைத்து மூடிவிடவேண்டும். பிறகு வீஸாக்களை குளிர்ச்சியான இடத்தில் வைத்திருந்தால் பழங்கள் வெகுநாள் வரையில் கெடாமலிருக்கும்.

### The Dyeing Industry.

சாயம் போடும் தொழில்.—தற்காலம் ஐரோப்பா கண்டத்தில் நடக்கும் யுத்தத்தினால் சாயங்கள் அவ்விடமிருந்து வருவதில்லை. கீழே குறிப்பிட்டிருக்கும் விளைவு சாயங்கள் மதுரையில் அதிகமாய் உடனே வேண்டியிருப்பதாய் தெரிகிறது. அப்படிப்பட்ட சாயங்களில் பயிரிடுபவர்கள் தாங்கள் விளைவிக்கும் சாயங்களை மதுரைக்கு ரொம்ப லாபத்துடன் விற்பனைக்கு அனுப்பலாம் என்று தெரிகிறது.

சாயவகைகள் பின் வருமாறு:—

(1) மஞ்சிட்டி.
(2) நுணு வகையரா.
(3) மணிகூடு.

### Commercial Congress.

வ்யாபார காங்ரேஸ்.—இந்தியாவின் வ்யாபார விஷயங்களை கவனிப்பதற்காக ஒரு வ்யாபாரக் காங்க்ரெஸ் நடத்தவேண்டுமென்று சென்றவர்ஷம் பம்பாயைச்சேர்ந்த ஆனரபிள் ஸர் பஸுல்பாய் கரீம்பாய் ஒரு ப்ரேரணைசெய்தார். அநேக இந்திய ப்ரமுகர்கள் அந்த ப்ரேரணைக்கு ஸாதகமாக இருந்தார்கள். இப்போது யுத்தம் நடந்துவருவதை உத்தேசித்து அந்த ப்ரேரணையைப்பற்றி கவனிப்பதை நிறுத்தியிருக்கிறார்கள்.

# ECONOMIC PRODUCTS.
## விலையுள்ள பொருள்கள்.

**Kapok.**

இலவம் பஞ்சு.—ஸாதாரண வளர்ச்சியுள்ளதும் 7-வர்ஷத்துக்கு மேற்படாததுமான ஒரு இலவ மரத்தில் ஒரு வர்ஷத்துக்கு 350 முதல் 450 இலவங்காய் கிடைக்கும். 7-வர்ஷ முதல் 10 வர்ஷம் வரையிலுள்ள மரங்களில் ஸாதாரணமாய் 600 காய்களுக்கு மேல் கிடைக்கும். ஸாதாரணமாய் 100 அல்லது 110 காய்களிலிருந்து 1 ராத்தல் சுத்தமான பஞ்சு கிடைக்கும். 1-ஏகர் நிலத்தில் 125 இலவமரங்கள் இருக்கலாம். அப்படியானல் ஒரு ஏகர் இலவமரத் தோட்டத்திலிருந்து வர்ஷந்தோறும் 400 முதல் 450 ராத்தல் சுத்தமான பஞ்சு கிடைக்கும். ஒரு மரத்தில் எவ்வளவு நிறை பஞ்சுகிடைக்குமோ அவ்வளவு நிறையைப்போல் இரண்டு மடங்கு இலவம் விதையும் கிடைக்கும். 1000 இலவங்காய்களின் விலை ஸுமார் $2\frac{1}{4}$ ரூபாயாகும்.

**Vegetable Ghee.**

தாவர நெய்.—மைஸூர் ஸமஸ்தானத்திலுள்ள தரிக்கெரிக்காடுகளில் மறுவினு என்னும் ஒருவகைச் செடியிருக்கிறது. அதன் பழங்களை நசுக்கினல் தயிரைப்போன்ற ஒருவகையானவஸ்து வடிகிறது. அதோடுகொஞ்சம் ஜலத்தைச் சேர்த்து வைத்திருந்தால், அதன்மேல் காய்ச்சின பாலின்மேல் மிதக்கும் பாலாடைபோன்ற ஒருவகையான வெண்ணெய் மிதக்கிறது. அதைக் காய்ச்சினல் ஒருவகை நெய்யுண்டாகிறதாம். அந்த நெய் மைஸூர் ப்ராந்தியங்களில் ஏராளமாக தயார் செய்யப்பட்டு விற்பனையாகி வருகிறதாம். அந்தநெய் எவ்விதத்திலும் ஸாதாரண நெய்யை ஒத்திருக்கிறதென்று சொல்லப்படுகிறது.

**The Uses of Aluminium.**

அலூமினியத்தின் உபயோகங்கள்.—அலூமினியம் என்னும் உலோகம் தற்காலம் அநேக வேலைகளுக்கு உபயோகப்பட்டு வருகிறது. இந்த உலோகம் உஷ்ணத்தை வெகு சீக்ரம் க்ரஹிக்கிறதாலும், துருப் பிடிப்பதில்லையாகையாலும், இதில் விஷ ஸம்பந்தமான பொருள்கள் இல்லாததாலும், இது உணவுப் பொருள்கள் தயார் செய்வதற்கு வேண்டிய பாத்ரங்கள் செய்ய ரொம்பவும் உபயோகப்பட்டு வருகிறது.

அமெரிக்காவில், பெரிய தொட்டிகளும், பெரிய சமையல் செய்யும் பாத்ரங்களும், சாராயம் இறக்குவது, கொழுப்புகள் தயார் செய்வது, ஊறுகாய்ப் போன்ற உணவுப்பொருள்கள் தயார் செய்வது ஆகிய இந்த வேலைகளுக்கு வேண்டிய பாத்ரங்களும் அலூமினியத்தால் செய்யப்படுகின்றன.

இன்னும் வாஸனைகள் இறக்குவது, ஙிரப் செய்வது, வார்னிஷ் செய்வது, சாப்பிடத் தகுந்த எண்ணெய் தயார் செய்வது, 'நைட்ரிக் ஆஸிட்' த்ராவகம் செய்வது முதலிய வேலைகளில் அலூமினியம் பாத்ரங்கள் ஏராளமாய் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. அமெரிக்காவில் நைட்ரிக் ஆஸிட் த்ராவகத்தை வெளியூர்களுக்கு ஏராளமான அளவில் அனுப்புவதற்காக அலூமினியத்தால் பெரிய தொட்டிகளாய் அமைந்த வண்டிகள் செய்து உபயோகிக்கிருர்கள்.

அலூமினியத்தைப் பொடிசெய்து அதை வர்ணம் பூசுவதற்கும், வெடி மருந்துகள் செய்வதற்கும், லெத்தோக்ராப் என்னும் முறையால் அச்சடிப்பதற்கும், ஸாதாரண முறையால் அச்சடிப்பதற்கும் உபயோகிக்கிருர்கள். அலூமினிய ரேக்குகளும் மெல்லிய தகடுகளும் புதிய முறையால் ரொம்ப மலிவாகச் செய்யப்படுவதால் இவைகளை அநேக வேலைகளில் ஏராளமாய் உபயோகித்து வருகிருர்கள்.

**Turmeric.**

மஞ்சள்.—இப்போது சில காலமாக இங்க்லண்டில் புதிதாக ஸைன்யம் சேகரித்துக்கொண்டிருக்கிருர்கள். இந்த ஸைன்யத்திலுள்ள ஸோல்ஜர்களுக்கு காக்கியென்று சொல்லப்படும் ஒருவகைப் பழுப்பு நிறமான உடுப்புகள் ஏராளமாக வேண்டியிருக்கின்றன. காக்கி நிறமான உடுப்புகள் தயார் செய்வதற்கு அந்த நிறங்கொண்ட சாயப் பொருள்கள் வேண்டியிருக்கின்றன. அவைகளில் மஞ்சள் ஒன்ருகும்.

மஞ்சள் இந்தியா, ஜாவா, சீனு முதலிய விடங்களில் ஏராளமாய்ப் பயிரிடப்படுகிறது. இதை தருவித்து வைத்திருந்த இங்க்லீஷ் இறக்குமதி வ்யாபாரிகளுக்கு நல்ல லாபம் கிடைத்துவருகிறதாம். மஞ்சளின் விலை சற்று உயர்ந்திருக்கிறதாம். சென்னை விரளி மஞ்சளின் விலை ஒருஅந்தர் ரூ. 18-12-0; சென்னை முண்டான் மஞ்சள் ஒரு அந்தர் 15-ரூபாய். வங்காளத்து விரளி மஞ்சள் 14-ரூ. 10-அணு முதல் 15-ரூபாய் வரையில் விலைப்போகிறது.

## BOYS' PAGE.
## பையன்கள் பக்கம்.

### An Ingenious Sum.

ஒரு ஜாலக் கணக்கு—ஒரு புஸ்தகத்தில் ஏதோ ஒரு பக்கத்தைத் (Page) திறந்து அப்பக்கத்தின் எண் இன்னதென்று குறித்துக்கொள்ளவும். அதில் முதல் 9-வரிசைளுக்குள் (ஒன்பதுக்கதிகப்படக் கூடாது) ஒரு வரியைக் குறித்துக்கொள்ளவும். அப்படி குறித்துக் கொண்ட வரியில் முதல் 9 எழுத்துக்களுக்குள் ஒரு எழுத்தைக் குறித்துக்கொள்ளவும்.

பக்கத்தின் எண்ணுடன் 2-ஐக் கூட்டி பத்தால் பெருக்கவும். பெருக்கி வந்த தொகையுடன் வரியின் எண்ணைக் கூட்டிக் கொள்ளவும். கூட்டி வந்ததை 10-ஆல் பெருக்கவும். அதோடு 50 சேர்த்துக்கொள்ளவும். பிறகு எழுத்தின் எண்ணைச் சேர்த்துக்கொள்ளவும். அதிலிருந்து 145-ஐக் கழிக்கவும். கழித்து வந்த தொகையைக் கேட்டு அதிலிருந்து மறுபடியும் 105-ஐக் கழித்தால் வரும் தொகையின் கடைசி எண் எழுத்தின் எண்ணாகவும், கடைசியிலிருந்து இரண்டாவது எண் வரியின் எண்ணாகவும், பாக்கியுள்ளது பக்கத்தின் எண்ணாகவும் இருக்கும்.

உதாரணம்:—மேற்சொன்னபடி குறித்துக்கொண்டவைகள் 265-வது பக்கமென்றும், 4-வது வரி யென்றும், 9-வது எழுத்து என்றும் வைத்துக்கொள்வோம். கணிதம் செய்யும் விவரம்:—

குறித்த "பக்கத்தின் எண்" 265; அத்துடன் 2 சேர்த்துக்கொள்ளவும். 265+2=267; அதை 10-ஆல் பெருக்கவும். 267×10=2670; அத்துடன் முன் குறித்துக்கொள்ளப்பட்ட "வரியின் எண்" சேர்த்துக் கொள்ளவும். 2670+4=2674; அதை 10-ஆல் பெருக்கவும். 2674×10-26740; அத்துடன் 50 சேர்த்துக்கொள்ளவும். 26740+50=26790; முன் குறித்துக்கொள்ளப்பட்ட "எழுத்தின் எண்" சேர்த்துக் கொள்ளவும். 26790+9=26799; அதிலிருந்து 145-ஐக் கழிக்கவும். 26799-145=26654; இந்த விடையைச் சொன்ன பிற்பாடு, அதிலிருந்து 105-ஐக் கழித்தால் (26654-105)—26549 என்று வரும். இதில் கடைசி ஸ்தானத்திலுள்ள 9, 9-வது எழுத்து; 10-வது ஸ்தானத்திலுள்ள 4, 4-வது வரி; மீதி 265 என்பது, 265-வது பக்கம்.—பி. வி. வ்யாஸராவ்.

### The Baroda Gymnasium.

பரோடா தேகப்பயிற்சி சாலை.—பரோடா பட்டணத்தில் ஜம்மடாடா விஜயம் சாலா என்று பெயருள்ள ஒரு தேகப்பயிற்சி சாலை யிருக்கிறது. பரோடா பட்டணத்திலும், அந்த ஸமஸ்தானத்திலுமுள்ள வாலிபர்களே யல்லாமல் பம்பாய் ராஜதானியின் பற்பல பாகங்களிலுள்ள வாலிபர்களும் அந்த வித்யா சாலைக்குப் போய் கற்று வருகிறார்களாம். அங்கே இங்கிலீஷ் தேகப்பயிற்சி விளையாட்டுகளும், இந்திய தேகப் பயிற்சி விளையாட்டுகளும் கற்பித்து வருகிறார்கள். இந்திய விளையாட்டுகளில் முக்யமாய் கத்தி விளையாட்டு, கடாரி விளையாட்டு, குண்டான் தடி விளையாட்டு முதலியவைகள் கற்பிக்கப்பட்டு வருகின்றன. இந்த மூன்று விளையாட்டுகளும் ஒவ்வொருவரும் எதிரிகளிலிருந்து தம்மைக் காத்துக் கொள்வதற்காகக் கற்றுக் கொள்ளுகிறார்களாம். இவைகளைக் கற்றுக்கொள்ளாவிட்டால் அந்த சாலையில் படிப்பு முடிந்ததாகாது. இந்த தேகப் பயிற்சி சாலையில் 600 மாணவர்கள் இருக்கிறார்கள். இதில் ஒரு புஸ்தகசாலையும், ஆயுதசாலையும், ஒரு ஹோஸ்டலும் இருக்கின்றன. ஒருவர் தம்மை எதிரிகளிலிருந்து காத்துக்கொள்ள உதவும் பற்பல வித்தைகளில் தேர்ந்த ஒரு இந்தியர் அந்த தேகப்பயிற்சி சாலையை நடத்திவருகிறார்.

### A Puzzle.

ஒரு விடுகதை.—இரண்டு தம்பதிகள் நடந்து யாத்திரை செய்துகொண்டு போகையில் ஒரு ஆற்றைக் கடக்க நேரிட்டது. ஆற்றின் குருக்கே பாலம் ஒன்றுமில்லை. ஆற்றங் கரையில் ஒரு சிறிய படகு மாத்ரம் இருந்தது. அந்தப் படகில் ஒரு பாகத்தில் அதில் 200 ராத்தல் நிறைதான் ஏற்றலாம் என்று எழுதியிருந்தது. வந்தவர்களில் இரண்டு புருஷர்களும் ஒவ்வொருவரும் 200 ராத்தல் நிறையுள்ளவர்களாக இருந்தார்கள். இரண்டு ஸ்த்ரீகளில் ஒவ்வொருவரும் 100 ராத்தல் நிறை யிருந்தார்கள். அவர்கள் நால்வரும் எவ்விதம் ஆற்றைக் கடந்தார்கள்? (நமது பத்ரிகையை வாசிப்பவர்கள் இதற்கு விடையை எழுதியனுப்பலாம். விடை அடுத்த மாஸம் வெளியாகும்.)

# LADIES' PAGE.
## ஸ்த்ரீகள் பக்கம்

### Burmese Girls.

பர்மா தேசத்துப் பெண்கள்.—பர்மா தேசத்துப் பெண்கள் கோஷா முறையை அனுஷ்டித்து வருகிறவர்க ளல்லர். பெண்கள் பெரியவர்களாக ஆகும்பொழுது, அவர்கள் பல ஸ்வதந்தரங்களைப்பெற்று வாழ்கிறார்கள். பர்மாவில் பெண்களுக்கென்று ஏற்பட்டிருக்கும் ஸ்கூல்களில் பெண்களே படித்து வர வேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. ஆனால் அந்த ஸ்கூல்களில் பெரும்பாலோர் பெண்களாயிருப்பார்கள். சில வேளையில் ஆண்பிள்ளைகளின் தொகை அதிகமாகும்பொழுது, அவைகள் ஆண்பிள்ளைகளுக் கேற்பட்ட ஸ்கூல்கள் என்ற பெயருடனும் வழங்கி வருவதுண்டு. ஸ்கூல்களில் படிக்கும் பிள்ளைகளுக்கு (ஆண் பெண் பாலர்களுக்கு) பாடங்கள் எல்லாம் ஒன்றுதான். தையல் வேலை மட்டும் பெண்களுக்குக் கட்டாயமாகக் கற்பிக்கப்படுகிறது. விளையாட்டுகளிலுங்கூட, பர்மா தேசத்துப் பெண்கள் ஆண்பிள்ளைகளுடன் சேர்ந்து பல விளையாட்டுகள் விளையாடுகிறார்கள். பர்மா தேசத்துப்பெண்கள் இவ்வளவு ஸ்வதந்தரம் பெற்றிருப்பது அவர்களுடைய நன்மைக்கோ, கேட்டுக் கோ என்பதைத் தீர்மானமாகச் சொல்லுவதற்கில்லை. பர்மா தேசத்தில் பெண்களின் கல்விக்கு யாதொருவிதமான குந்தகமும் இல்லை. பர்மா தேசத்துப் பெற்றோர்கள், தங்களுடைய பெண்கள் கல்வியைக் கற்று நிபுணர்களாக வேண்டுமென்று எண்ணங் கொண்டவர்களல்லர். வீட்டுக் கார்யங்களை நன்றாக நிர்வகிப்பதற்குப் போதுமான கணக்கு வழக்குகள், வாசிப்பு முதலியவைகள் இருந்தால் போதும் என்று எண்ணங் கொண்டவர்கள். பர்மாவில் தையல்வேலை ஸ்கூல்களில் கட்டாய பாடமாக்கப் பட்டிருக்கிறதைப்பற்றி பர்மா தேசத்துப்பெற்றோர்கள் த்ருப்திகரமா யிருக்கிறார்கள். பெண்களுக்கு பூகோள சாஸ்த்ரம் கற்பிப்பதற்குப் பதிலாக, வீட்டு நிர்வாகக் கார்யங்கள் ஸம்பந்தமான பாடங்களையும் சமையல் ஸம்பந்தமான பாடங்களையும் கற்பிக்க வேண்டுமென்று ஒரு உத்தரவு பிறந்திருக்கிறது. போனவர்ஷம் ரங்கூன் காலேஜில் மூன்று பர்மியப் பெண்கள் வாசித்து வந்தார்கள்.—சுதேசமித்திரன்.

### Teething of Children.

குழந்தைகளுக்குப் பல் முளைத்தல்.—குழந்தைகளுக்குப் பல் முளைக்கும்பொழுது வயிறுபோக ஆரம்பிக்கும். இந்த ஸமயத்தில் வயிற்றுப்போக்கு அதிகமாகாதபடி ஜாக்ரதையாயிருக்கவேண்டும். இல்லாவிட்டால் குழந்தை பலஹீனயாய்ப்போகும். பல்முளைக்கக் காலமும் அதிகமாகும். குழந்தைகளின் கால்களை ஈரமில்லாமலும் உஷ்ணமாயும் வைத்திருக்கவேண்டும். அந்த ஸமயத்தில் அவைகளின் பல்லீறுகள் வீங்கியிருந்தால், கொதிக்கக்காய்ச்சிக் குளிர்ந்துள்ள ஜலத்தை அடிக்கடி கொஞ்சம் சீப்பிக்குடிக்க கொடுத்தால், வலியில்லாமலிருக்கும்.

### A Sad Truth.

விஸனகரமான நிலைமை.—இந்தியாவிலுள்ள பால்ய விதவைகளின் தொகையைக் கணக்கு எடுத்ததில்,

| | |
|---|---|
| 1-வயதுக்குட்பட்டு | 859. |
| 2-வயது முதல் 3-வயது, | 1,886. |
| 3-வயது முதல் 4-வயது, | 3,732. |
| 4-வயது முதல் 5-வயது, | 8,180. |
| 5-வயது முதல் 10-வயது, | 78,407. |
| 10-வயது முதல் 15-வயது, | 2,27,367. |
| ஆக. | 3,20,431. |

பால்ய விதவைகளிருப்பதாக வெளியாகிறது. நாம் பால்ய விவாஹத்தை நிறுத்திவிடும் பக்ஷத்தில் லக்ஷக்கணக்கான குழந்தைகள் இப்படிப்பட்ட கொடுமைக்கு உள்ளாகமாட்டார்கள்.

### A Remedy for Fever.

ஜ்வரத்துக்கு வைத்யம்.—ஒருபலம் இஞ்சியை அம்மியில்வைத்து அரைத்து சாறு பிழிந்துகொண்டு, ஒரு சட்டியை அடுப்பிலேற்றி நெருப்புப்பறக்க காய வைத்து அதில் மேற்படி ரஸத்தைவிட்டு தெளிந்த பிறகு,அந்தரஸத்தை எடுத்துக்கொண்டு சுக்கு, மிளகு, திப்பிலி, லவங்கம், ஏலம், சன்னராஷ்டகம் இவைகளை ஸம எடை எடுத்து வறுத்துத் தூள்செய்து அந்த ரஸத்திலிட்டுக்கலக்கி, 5-துளி தேன்விட்டு சாப்பிட்டுவரவும். இச்சா பத்யம்.—விச்வகர்ம குலோபகாரியில் பி. எம்.

# INDIANS ABROAD.
# இதர தேசங்களில் இந்தியர்கள்.

**The "Komagata Maru" Passengers' Affray.**

'கோமாகாட்டா மாரு' ப்ரயாணிகளின் கலகம்:- சென்ற மே மாஸம் அநேக இந்தியர்கள் 'கோமா காட்டா மாரு' என்று பெயர் கொண்ட ஒரு கப்பலில் ஏறி, அமெரிக்காவைச் சேர்ந்த கனடாவிற்குப்போய் அங்கு இறங்க முயற்சி செய்ததையும், கனடா கவர்ன் மெண்ட் அதிகாரிகள் இந்தியர்கள் கனடாவுக்குள் வருவதை ஆக்ஷேபித்ததையும், கடைசியில் இந்தியர் கள் அக்கிருந்து திரும்பி விட்டதையும் நேயர்கள் ஏற் கனவே அறிந்திருப்பார்கள். அவர்கள் கல்கத்தாவுக்கு வந்தவுடன் அவர்களை கவர்ன்மெண்ட் செலவில் பஞ் சாபுக்கு அனுப்புவதற்காக வங்காள கவர்ன்மெண் டார்வேண்டிய ஏற்பாடுகள் செய்துவைத்திருந்தார் கள். இந்தியர்கள் சென்ற ஸெப்டம்பர் மாஸம் 26-தேதி யன்று ஹூக்ளி நதியில் வந்து சேர்ந்தார்கள். அவர்களைக் கப்பலிலிருந்து நேராக பஞ்சாபுக்கு ஏற் றிப்போவதற்காக வங்காள கவர்ன்மெண்டார் ஒரு ஸ்பெஷல் வண்டி ஏற்பாடுசெய்து கல்கத்தாவிற் குப்பக்கத்திலுள்ள பட்ஜ்பட்ஜ் ஸ்டேஷனில் ஷ ஸ்பெஷல் வண்டியை வரவழைத்து வைத்திருந் தார்கள். ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டும் சில பஞ்சாப் ஆபிஸர்களும் இந்தியர்கள் வந்த கப்பலுக்குப் போய், இந்தியர்களைக்கண்டு, கரையில் இறங்கச் சொல்லி, அவர்கள் நேரே பஞ்சாபுக்குப் போக ஸ்பெ ஷல் வண்டி ஏற்பாடாயிருக்கிற தென்றும், அவர்கள் அதில் ஏறிப்போகலா மென்றும் சொன்னார்கள். ஆனால் இந்திய ப்ரயாணிகள் மாஜிஸ்ட்ரேட் சொன்ன வார்த்தைகளில் நம்பிக்கை கொள்ளாமல் கல்கத்தா வுக்கு ரோடுமார்க்கமாக நடந்து போகத்தீர்மானித்தார் கள். 1914-ம் வர்ஷத்து 5-வது ஆர்டினன்ஸ் என் னும் சட்டத்தால் அவர்களை நேரே பஞ்சாபுக்குப் போகும்படி கட்டாயப்படுத்துவதற்கு மாஜிஸ்ட்ரேட் டுக்கு அதிகாரம் உண்டு. முதலில் மாஜிஸ்ட்ரேட், அவர்கள் யாதொரு தடையுமில்லாமல் வண்டியில் ஏறிக்கொள்வார்கள் என்று நம்பி யிருந்ததால், அவர் ஷ சட்டத்தைப் பற்றி ப்ரஸ்தாபிக்கவில்லை. ஆனால் இந்தியர்கள் வண்டியிலேற மறுக்கவே மாஜிஸ்ட்ரேட் ப்ரயாணிகளின் தலைவர்களிடம் ஆர்டினன்ஸைக் காட்டி அதன்படி யவர்கள் வண்டியிலேறி பஞ்சாபுக் குப் போகவேண்டு மென்று சொன்னார். இந்தியர் கள் அதன்படி நடக்காமல் கல்கத்தாவுக்குபோகும் ரஸ் தாவில் போக ஆரம்பித்தார்கள். அவர்கள் போவ தைத்தடுக்க மாஜிஸ்ட்ரேட்டுக்குப் போதுமான போ லீஸ் உதவியில்லை. அதன்மேல் அவர் துருப்புகளுக் கும் போலீஸுக்கும் சொல்லியனுப்பி, அவர்களைக் கொண்டு, அதற்குள் மூன்று நான்கு மைல் போய் விட்ட இந்தியர்களை நிறுத்தி அவர்களை பட்ஜ்பட் ஜுக்கு அழைத்து வந்தார். இதற்குள் இந்திய ப்ர யாணிகளில் 60-பேர் ஏற்கனவே ஒரு ஸ்பெஷல் வண்டியில் ஏறிப்போய்விட்டார்கள். மற்றவர்களை ஏற்றிப்போவதற்கு இன்னொரு ஸ்பெஷல் வண்டியும் ஏற்பாடாய்க் கொண்டிருந்தது.

கல்கத்தாவுக்கு நடந்துபோன இந்தியர்கள் திரும்பி ஸ்டேஷனுக்கு வந்ததும் ஒரு உத்யோகஸ்தர் இந்தியர்களின் தலைவர்களிடம் கார்யங்களின் நிலை மையை விவரித்துச் சொல்வதற்காக அவர்களைக் கூப் பிட்டார். அப்போது இந்தியர்கள் திடீரென்று ஆவே சங்கொண்டு ரிவால்வர்களால் போலீஸ்காரர்களின் மேலும், ஆபிஸர்களின் மேலும் சுட்டார்கள். அதன் மேல் துருப்புகள் இந்தியர்களை எதிர்த்தார்கள். போ லீஸ்காரர்களில் சிலரும் உத்யோகஸ்தர்களில் சிலரும் காயமடைந்தும் இரண்டொருவர் இறந்தும் போனார் களென்று தெரிகிறது. கலகம் செய்த இந்தியர்களில் 16 பேரும், பக்கத்திலிருந்த வேறு இரண்டுபேரும் இறந்துபோனார்கள்.

இந்தியர்களில் சிலர் பக்கத்து க்ராமங்களில் போய் புகுந்துகொண்டார்கள். வேறு சிலர் போலீஸாரிடம் தாமாகவே வந்து அகப்பட்டுக்கொண்டார்கள். மற்ற இந்தியர்களையும் பிடிப்பதற்கு கவர்ன்மெண்டார் ஏற் பாடு செய்து பலரைக் கைது செய்து விட்டார்கள்.

மேலே விவரித்த பட்ஜ்பட்ஜ் கலகத்தைப்பற்றி விசாரணை செய்வதற்காக வைஸ்ராய் ஒரு கமிட்டி நியமித்திருக்கிறார். அந்தக் கமிட்டியார் 'கோமகாட் டா மாரு' கப்பலின் ப்ரயாணம் ஸம்பந்தமான விஷ யங்களையும், பட்ஜ் பட்ஜில் நடந்த கலத்தைப்பற்றியும் கலகத்துக்குப்பின் இந்தியர்களைக் கைது செய்ததைப் பற்றியும் விசாரணை செய்து இந்தியா கவர்ன்மெண் டுக்கு ரிபோர்ட் செய்வார்கள்.

## FUN AND ANECDOTE.
## வேடிக்கையும் துக்கடாக்கதைகளும்.

### Contentment.

த்ருப்தி.—ஒரூரில் ஒரு ப்ரஸங்கி அதிக செல்வத்தாலுண்டாகும் கெடுதிகளைப் பற்றி ப்ரஸங்கம் செய்தார். ப்ரஸங்கத்துக்கு வந்திருந்தவர்களில் ஒருவராகிய கோவிந்தய்யர் என்பவர் ப்ரஸங்கிக்கு மிகவும் வேண்டியவர். அவருக்கு 7 பெண்கள் உண்டு. ப்ரஸங்கி ப்ரஸங்கத்தின் நடுவில்,

"ஒருவருக்கு 7 பெண்கள் இருக்கிறார்கள் என்றால், அவர் எவ்வளவு ஸந்தோஷமடையக்கூடும்? ஒரு லக்ஷாதிபதி பாக்யவானா? ஏழெட்டு பெண்களுள்ளவன் பாக்யவானா? நீங்களே சொல்லுங்களேன், கோவிந்தய்யர்வாள், யார் ரொம்ப பாக்யசாலி; யார் ரொம்ப ஸந்தோஷசாலி?"

கோவிந்தய்யர் எழுந்து, "ஏழெட்டு பெண்கள் உள்ளவருக்குத்தான் மனஸ் த்ருப்தி ஜாஸ்தி என்று எனக்குத் தோன்றுகிறது. லக்ஷாதிபதி இன்னும் பணம் வேண்டுமென்று மனம் சலித்துக்கொள்ளுகிறான். இவனோ 7 பெண் போதும்; இனிப்பெண்களே வேண்டாமென்று த்ருப்திப்படுகிறான்."—என்றார்.

### The Policeman & a Thief.

போலீஸ்காரனும் திருடனும்.—ஒரு ஊரில் அதிகமாக திருட்டு நடந்துவந்தமையால், எல்லாவிடங்களிலும் போலீஸ்காரர்களை நிறுத்தி வைத்திருந்தார்கள். அப்படியிருக்கையில் ஒரு திருடன் ஒரு கைவண்டியில் மூட்டையொன்றை யேற்றிக்கொண்டு ஒரு போலீஸ்காரன் இருந்த வழியாக வந்துகொண்டிருந்தான். அவனைக் கண்டதும் போலீஸ்காரன் தன்னுடைய வழக்கப்படி, "நீ யார்? அந்த வண்டியிலிருப்பது என்ன?" என்று கேட்டான். திருடன் முதலில் கொஞ்சம் பயப்பட்டானாயினும் தைர்யத்தைக் கைவிடாது "ஐயா! கான்ஸ்டபில் வீராஸாமி பிள்ளை நீர்தாமோ" என்று கேட்டான். போலீஸ்காரன் "ஆம்! நான்தான். என்ன விசேஷம்" என்று சொன்னான். அதற்குத் திருடன் "ஐயா! நல்ல காலம்; தங்களை இங்கேயே ஸந்தித்துவிட்டேன். உங்களுடைய இன்ஸ்பெக்டர் க்ருஷ்ணஸாமி ஐயர் ஒரு திருடனைப் பிடிக்கப் போகையில் திருடன் இந்த மூட்டையைப் போட்டுவிட்டு கம்பி நீட்டிவிட்டான், அந்த வழியாக வந்த என்னை இந்த மூட்டையைத் தங்களிடம் ஒப்பித்துவிடும்படி சொன்னார், எனக்கு நேரமாகிறது." என்று சொல்லிக்கொண்டே மூட்டையை யிறக்கிக்கொண்டிருந்தான். போலீஸ்காரன் "ஐயா! நான் உங்களுக்கு நாலணாத் தருகிறேன். அந்த மூட்டையை தயவுசெய்து போலீஸ் ஸ்டேஷனில் சேர்த்துவிடுங்கள்." என்று சொல்லி நாலணாவைக் கொடுத்து இன்ஸ்பெக்டரைத் தேடச் சென்றான். திருடன் "வந்த காசுக்கு வட்டமில்லை" யென்று நாலணாவைப் பெற்று வண்டியுடன் ஓட்டம் பிடித்தான். போலீஸ்காரன் இந்த சூதை யறிந்ததும் திருடனைப் பிடிப்பதைவிட்டு நாலணா இனாமும் கொடுக்கவேண்டியதாயிற்றே யென்று ரொம்ப வெட்கமடைந்தான்.—மாதர் மனோரஞ்சனி.

### A German Ruse.

ஜெர்மானியர்களின் தந்த்ரம்.—ஸமீபத்தில் ப்ரான்ஸில் யுத்த களத்தில் யுத்தம் நடந்து கொண்டிருந்தபோது, சில ஜெர்மானியர்கள் பிணத்தை வைக்கும் சவப்பெட்டி ஒன்றைத் தூக்கிக்கொண்டு ப்ரிட்டிஷ் ஸைன்யங்கள் இருந்த அகழ்களுக்கு வந்தார்கள். பிணப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு போகிறவர்களுக்கு முன்னால் ஒரு குரு ஒரு புஸ்தகத்தை திறந்துவைத்து ஏதோ சில ஜப வாக்யங்கள் வாசித்துக்கொண்டு போனார். பின்னால் அநேக ஜெர்மானியர்கள் துக்கம் கொண்டாடிக்கொண்டுவந்தார்கள். இவைகளைக் கண்டதும் அகழிலிருந்த ப்ரிட்டிஷ் துருப்பின் தலைவரான ஆபிஸர், ப்ரேதக் கோலத்துக்கு மரியாதை செய்ய எண்ணி தமது ஸோல்ஜர்களை வந்தனம் (ஸல்யூட்) செய்யும் நிலைமையில் நிற்கச் சொன்னார். ஸோல்ஜர்கள் அப்படியே நின்றார்கள். சவக்கோலத்துக்கு முன்னால் போன குருவும் வந்தனம் செய்தார். பிறகு சவப்பெட்டியின்மேல் போட்டிருந்த துணியை எடுத்துவிட்டார். அதற்குள் பிணப்பெட்டிக்குப் பதிலாக ஒரு மாக்ஸிம் பீரங்கியிருந்தது. ஜெர்மானியர்கள் அந்த பீரங்கியைக் கொண்டு அகழிலிருந்த ப்ரிட்டிஷ் ஸோல்ஜர்களில் சிலரை காயப்படுத்தியும் மற்றவர்களை கொன்றும் விட்டார்கள்.

# CURIOSITIES.
# விநோதங்கள்.

### A Novel Savings Bank.

ஒரு நவீன ஸேவிங்க்ஸ் பாங்கி ஏற்பாடு.—பர்லினைச் சேர்ந்த ஒரு முனிஸிபாலிடியார் குழந்தைகளுக்காக ஒரு ஸேவிங்க்ஸ் பாங்கி ஏற்பாடு அனுஷ்டித்து வருகிறார்கள். அந்த முனிஸிபாலிடியிலுள்ளவர்கள் யாருக்காவது ஒரு குழந்தை பிறந்தால் பிறந்தவுடன், அந்த குழந்தை பேரால் ஒரு ஸேவிங்க்ஸ் பாங்கிக் கணக்கு ஏற்படுத்தி அந்தக் கணக்கில் ஒரு மார்க் அதாவது 12 அணு போடுகிறார்கள். ஒருவருக்கு எத்தனை குழந்தைகள் பிறந்தபோதிலும் ஒவ்வொரு குழந்தைக்கும் தனித்தனி கணக்கு ஏற்படுத்தி ஒவ்வொரு கணக்கிலும் ஒரு மார்க் வரவு வைத்து ஆரம்பித்து விடுகிறார்கள். இந்தத் தொகை ரொம்பவும் குறைவானதே. மேலும் குழந்தையின் பெற்றோராவது அல்லது வயது சென்றபின் அந்தக் குழந்தையாவது அந்தத் தொகையை ஒருபோதும் கணக்கிலிருந்து வாங்கிக் கணக்கை முடித்து விடக்கூடாது. அந்தத் தொகைக்குமேல் பெற்றோர்கள் தங்கள் சக்தியானுஸாரம் குழந்தைகளுக்கு என்று ஸேவிங்க்ஸ் பாங்கிக் கணக்கில் சேர்க்கலாம்.

வேண்டும்போதெல்லாம் முனிஸிபாலிடியார் போட்ட 12-அணுவை வைத்து விட்டு மற்ற பணத்தில் வேண்டிய அளவு பாங்கில் வாங்கிக்கொள்ளலாம். இதனுல் ஒரு குழந்தையானது எப்போதும் குறைந்தது 12-அணு ஐவேஜியுள்ளதாக இருக்கிறது. இது கேட்க வேடிக்கையாகத் தான் இருக்கிறது. ஆனுல் ஜனங்கள் இதனுல் செட்டாய்ச் செலவு செய்யவும், மிச்சம் பிடிக்கவும் பழகிவிட்டார்கள். இந்த ஏற்பாடு 1909-ம் வர்ஷத்தில் அனுஷ்டானத்துக்கு வந்தது. அது முதல் 1912-ம் வர்ஷம் முடிய 8662 குழந்தை ஸேவிங்க்ஸ் பாங்கிக் கணக்குகள் ஏற்பட்டுவிட்டன. முதலில் அவைகளுக்குப் போட்ட 6,496½-ரூபாயும் 2,22,375-ரூபாயாக வளர்ந்துவிட்டது.

### A Costly Picture.

ஒரு விலையுயர்ந்த படம்.—அமெரிக்காவில் பிலடல்பியாவிலுள்ள ஒரு கோடீச்வரர் 23 அங்குலம் நீளம் 17 அங்குலம் அகலமுள்ள ஒரு படத்துக்கு மொத்தம் ஒரு டன் நிறையைவிட அதிகமான தங்க நாணயங்கள் கொடுத்து விலைக்கு வாங்கினுராம். அதற்குக் கொடுத்த தொகை லக்ஷத்து 40-ஆயிரம் பவுனுகும். (1,28,000 பவுன்களை சேர்த்து நிறுத்தால் ஒரு டன் நிறையிருக்கும்.) இவர் படத்துக்கு ஒரு சதுர அங்குலத்துக்கு 358-பவுன் வீதம் விலை கொடுத்திருக்கிறார்.

### Three Children in Nine Months.

ஒன்பது மாஸத்துக்குள் மூன்று குழந்தைகள்.—திருச்சூருக்குப் பக்கத்திலுள்ள ஒரு க்ராமத்தில் ஒரு நாயர் ஸ்த்ரீ ஒன்பது மாஸத்துக்குள் மூன்று குழந்தைகள் பெற்றுளாம். 1914-ம் வர்ஷம் பிப்ரவரி மாஸம் முதற்குழந்தை பிறந்தது. அதற்குப் பிறகு நாலைந்து மாஸம் அந்த ஸ்த்ரீ வ்யாதியாய் படுத்த படுக்கையாயிருந்தாள். சென்ற அக்டோபர் மாஸத்தில் அவளுக்கு ஒரு குழந்தை மறுபடியும் பிறந்தது. இரண்டாவது குழந்தை பிறந்த ஆருவது நாள் மறுபடியும் ஒரு குழந்தை பிறந்தது. ஆனுல் பின்னுல் பிறந்த இரண்டு குழந்தைகளும் பிறந்த சில நாள்களுக்கெல்லாம் இறந்துபோய் விட்டனவாம். முதலில் பிறந்த குழந்தை மாத்ரம் உயிரோடிருக்கிறதாம். தாய் ரொம்ப வ்யாதியாயிருக்கிருளாம்.

### Fowls & Scorpions.

கோழிகளும் தேள்களும்.—தான்யக் களஞ்சியங்கள் இருக்கும் இடங்களிலுள்ள கோழிக்குஞ்சுகளை தேள்கள் கடிப்பதேயில்லையாம். கோழிகள் தேள்களின்மேல் இருக்கும் சதையை ஒரு கொத்து கொத்தித் தின்கின்றனவாம். தவிர பூனைகளும் தேள்களைக் கொல்லுகின்றனவாம். இவைகள் எலிகளை எவ்வளவு துரிதமாய் கொல்லுகின்றனவோ அவ்வளவு துரிதமாய் தேள்களை உள்ளங்கையினுல் அடித்துக் கொல்லுகின்றனவாம்.

### Coffee in Brazil.

ப்ரேஜிலில் காப்பி.—தென் அமெரிக்காவிலுள்ள ப்ரேஜில் தேசத்தில் காப்பி ரொம்ப ஏராளமாக விளைகிறது. 1754-ம்வர்ஷத்தில் ஒரு ஸன்யாஸி அந்த தேசத்தின் முக்ய பட்டணமாகிய ரையோ-டி-ஜனீரோவில் ஒரு மடத்து தோட்டத்தில் இரண்டு காப்பிக்கொட்டை விதைகளை நட்டு வைத்தாராம். அந்த இரண்டு விதைகளும் முளைத்து அவைகளிலிருந்துதான் ப்ரேஜில் நாடு முழுவதும் காப்பிச்செடி ஏராளமாய்ப் பரவியிருக்கிறதாம்.

# DIARY OF THE WAR.

## யுத்த வர்த்தமானம்.

### ப்ரான்ஸிலும் பெல்ஜியத்திலும் நடக்கும் யுத்தம்.

நவம்பர்மீ" 13-தேதி.

லார்ட் ராபர்ட்ஸ் ப்ரான்ஸிலுள்ள இந்திய சைன்யங்களைப் பார்க்கப் போயிருக்கிறார்.

ஜெர்மன் சைன்யங்களில் சிறு பையன்கள் சேர்ந்து யுத்தத்தில் வெகு தைர்யமாய் யுத்தம் செய்கிறார்கள். ஆனால் அவர்களில் ரொம்ப சேதம் ஏற்படுகிறதாம்.

14-தேதி.

யிப்ரஸைச் சுற்றிலும் யுத்தம் பலமாக நடந்து கொண்டிருக்கிறது.

லார்ட் ராபர்ட்ஸ் இந்திய சைன்யங்களைப் பார்க்க ப்ரான்ஸுக்கு வந்திருந்தபோது மழையில் நனைந்ததால் ந்யூமோனியா வ்யாதி கண்டு இறந்துபோனார்.

15-தேதி.

யிப்ரஸிலும் ஆர்கோனிலும் யுத்தம் கடுமையாய் நடக்கிறது. என் நதிச்சண்டை மறுபடியும் கடுமையாய் நடந்துவருகிறது.

16-தேதி.

லா பாஸ்ஸி என்னுமிடத்தில் ஜெர்மானியர்கள் சற்று முன்னுக்குப் போயிருக்கிறார்கள்.

17-தேதி.

ப்ரின்ஸ் ஆப் வேல்ஸ் போர் முனைக்குப் போயிருக்கிறார்.

ஜெர்மானியர்கள் ரீம்ஸ் பட்டணத்தைத் தாக்கிக் கொண்டிருக்கிறார்கள், ந்யூபோர்ட்டுக்கும் டிக்ஸ்மூடுக்கும் இடையில் பலமான பீரங்கி யுத்தம் நடக்கிறது.

18-தேதி.

ஒரு புது இந்திய சைன்யம் 7-தேதியன்று மார்ஸேல்ஸுக்கு வந்ததாகத் தெரிவிக்கப்படுகிறது.

20-தேதி.

ஜெர்மனியில் கவர்ன்மெண்டார் ப்ரசுரித்திருக்கும் ஜாப்தாவின்படி ப்ரஷ்ய சைன்யங்களில் 5,50,000 பேரும், மற்ற ஜெர்மன் நாடுகளின் சைன்யங்களில் 4,00,000 பேரும் சேதமாம்.

22-தேதி.

இரண்டு 'ஏரோப்ளேன்' ப்ரிடரிக்ஷேவன் என்னுமிடத்திலுள்ள ஜெர்மனிக்கு ஸொந்தமான ஸெப்பலின் ஆகாயக் கப்பல்கள் நிறுத்திவைக்கும் கொட்டகைகளின்மேல் வெடிகுண்டுகள் எறிந்தன.

23-தேதி.

ஜெர்மானியர்கள் யிப்ரஸை பலமாகத் தாக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஸ்வாஸோனுக்குப் பக்கத்திலும் பலமான பீரங்கி யுத்தம் நடந்தது.

சென்ற மாஸம் மாஸவர்த்தமானத்தில் 106-ம் பக்கத்தில் ஜெர்மானியர்கள் ஸீப்ரூஜ் என்னுமிடத்தில் 'ஸப்மரீன்' கப்பல்கள் கட்டுவதற்காக ஸப்மரீன் கப்பல்களின் பாகங்களை அவ்விடத்துக்குக் கொண்டுபோவதாக எழுதியிருந்தோம். இன்று ப்ரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் அந்த ஊரை கடலிலிருந்து தாக்கின. அநேக கட்டிடங்களும், தொழில்சாலைகளும் நாசமாயினவாம்.

இன்று ஸ்வாஸோனுக்குப் பக்கத்திலும் ரீம்ஸுக்குப் பக்கத்திலும் பீரங்கி யுத்தம் நடந்தது.

24-தேதி.

இங்கிலண்டின்மேல் படையெடுப்பதற்காக ஜெர்மானியர்கள் மனிதர்கள், ஆயுதங்கள் முதலியவைகள் கொண்டுபோவதற்காக கப்பல்கள் தயார் செய்து கொண்டிருக்கிறார்களென்று ஐரோப்பாவிலுள்ள பல விடங்களிலிருந்து ஸமாசாரங்கள் பத்ரிகைகளுக்கு எட்டியிருக்கின்றன.

25-தேதி.

ஜெர்மானியர்கள் வெர்டனுக்கு வடமேற்கேயுள்ள பெதின்கோர்ட் என்னுமிடத்தில் கூட்டு சைன்யங்களை எதிர்த்தார்கள். ஆனால் பின் தள்ளப்பட்டார்கள்.

ஜெர்மானியர்கள் கலே பட்டணத்தைப் பிடிக்க வேண்டுமென்ற எண்ணத்தை இன்னும் விட்டுவிடவில்லை யென்று சொல்லப்படுகிறது.

26-தேதி.

ஜெர்மானியர்கள் ரீம்ஸ் பட்டணத்தை மறுபடியும் பலமாய்த் தாக்கிக்கொண்டிருக்கிறார்கள்.

ஜெர்மானியர் பிடித்திருந்த டிக்ஸ்மூட் பட்டணத்தை கூட்டுத் துருப்புகள் மறுபடியும் பிடித்திருக்கின்றன.

57-வது "ஒயில்ட் ரைபிள்ஸ்" என்னும் ரெஜிமெண்டைச் சேர்ந்த ஹவில்தார் கங்காஸிங் என்பவருக்கு 'விக்டோரியா க்ராஸ்' என்னும் விருது கொடுக்கப்பட்

டிருக்கிறது. இதுதான் யுத்தத்தில் பராக்ரமத்துடன் சண்டை செய்ததற்காகக் கொடுக்கப்படும் ரொம்ப உயர்ந்த மெடலாகும்.

27-தேதி.

ப்ரான்ஸின் ப்ரெஸிடெண்டாகிய மா. ப்வான்காரெ ஜெனரல் ஜாப்ரெயுக்கு பராக்ரமத்துக்காக ஒரு மெடல் கொடுத்திருக்கிறார்.

29-தேதி.

இன்று இரவு நமது சக்ரவர்த்தி ப்ரான்ஸிலுள்ள ப்ரிட்டிஷ் ஸைன்யங்களின் ஹெடக்வார்ட்டர்ஸ் அதாவது தலைமை ஸ்தானத்தைப் பார்க்க ப்ரான்ஸுக்குப் போனார்.

30-தேதி.

பெல்ஜியத்திலுள்ள ஜெர்மன் ஸைன்யங்களில் 4-ஆர்மிகோர்களை ஜெர்மானியர்கள் போலண்டுக்கு அனுப்பியிருக்கிறார்களென்று தெரிகிறது.

கெய்ஸர் ஜெர்மனியின் கிழக்கு எல்லை நாட்டுக்குப் போயிருக்கிறாராம்.

யிஸர் நதிக்கும் லிஸ் நதிக்கும் நடுவில் ஒரு கொடிய யுத்தம் நடக்கிறது. ஜெர்மானியர்கள் யிப்ரஸைப் பிடிக்க ஒருலக்ஷம் ஸோல்ஜர்களை அனுப்பியிருக்கிறார்களாம்.

ஜெர்மனியிலுள்ள முதல் ரிஸர்வ் ஸைன்யமும் இரண்டாவது ரிஸர்வாகிய லாண்ட்வெரும் சேர்ந்து மொத்தம் 40 லக்ஷம் ஸோல்ஜர்களென்றும், அதில் 30 லக்ஷம் ஸோல்ஜர்கள் மேற்கு யுத்தகளத்தில் இருக்க வேண்டுமென்றும் ஒரு ராணுவ நிருபர் சொல்லுகிறார்.

ஜார்ஜ் அரசர் ப்ரான்ஸுக்குப் போய் அநேக ஆஸ்பத்ரிகளைப் பார்வையிட்டார்.

டிஸம்பர்மீ 2-தேதி.

இன்று வடபாகத்தில் 991-ஜெர்மானியர்கள் கூட்டுத் துருப்புகளால் கைது செய்யப்பட்டார்கள்.

பெல்ஜியத்தில் மேற்கே ப்ளான்டர்ஸ் என்னும் மாகாணத்தில் நடந்து வரும் யுத்தத்தில் இதுவரையில் 3-லக்ஷம் பேர்கள் சேதமென்று 'டைம்ஸ்' பத்ரிகையின் ராணுவ நிருபர் எழுதுகிறார். இதில் 2-லக்ஷம் பேர்கள் ஜெர்மானியர்களாம். 50,000 பேர் ப்ரெஞ்சுக்காரர்களாம். 50,000 பேர் ப்ரிட்டிஷ் ஸைன்யத்தைச் சேர்ந்தவர்கள். இதில் 5000 பேர் இந்தியர்களாம்.

டிக்ஸ்மூடுக்கு மேற்கே லாம்பர்னிஸ்ட் என்னுமிடத்தை ஜெர்மானியர்கள் பலமாய்த் தாக்கினார்கள்.

ஜார்ஜ் அரசரும் ப்ரான்ஸின் ப்ரெஸிடெண்டாகிய ப்வான்காரெயும் ப்ரிட்டிஷ் ஸைன்யங்களைப் போய் பார்வையிட்டார்கள். ஜார்ஜ் அரசர் ப்ரிட்டிஷ் ஸைன்யத்தின் ஹெட்க்வார்ட்டர் ஸ்தானத்தில் ஒரு விருந்து செய்தார். ப்ரான்ஸின் ப்ரெஸிடெண்ட், ப்ரான்ஸின் ப்ரதம மந்த்ரியாகிய மாஸ்யேவிவியானி, ஜெனரல் ஜாப்ரெ, ப்ரின்ஸ் அவ் வேல்ஸ், ஸர்ஜான் ப்ரெஞ்ச் முதலியவர்கள் அந்த விருந்துக்கு வந்திருந்தார்கள்.

3-தேதி.

ந்யூபோர்ட்டிலும், யிப்ரஸுக்குத் தெற்கிலும் கொஞ்சம் பலமான பீரங்கி யுத்தம் நடைபெற்றது.

4-தேதி.

ஜார்ஜ் அரசர் யுத்தகளத்தில் அகழ்களிலுள்ள துருப்புகளைப் பார்வையிட்டார். அவருடன் யுத்த மந்த்ரியாகிய லார்ட் கிச்சனரும் ஸேனாதிபதியாகிய ஸர்ஜான் ப்ரெஞ்சும் கூடப்போயிருந்தார்கள். ப்ரின்ஸ் அப் வேல்ஸும் பீரங்கி யுத்தம் நடக்கும்போது அகழ்களுக்குப்போய் துருப்புகளைப் பார்வையிட்டார்.

கூட்டு ஸைன்யங்கள் ஆல்ட்கிர்ச் என்னுமிடத்துப் பக்கத்தில் முன்னுக்குப் போயிருக்கின்றன.

5-தேதி.

ஜெர்மானியர்கள் ரீம்ஸை ரொம்ப பலமாகத் தாக்கிக்கொண்டிருக்கிறார்கள். ஆர்கோன் ப்ரதேசத்தில் யுத்தம் பலமாக நடக்கிறது.

ஜார்ஜ் அரசர் போர்முனையிலிருந்த அநேக ஆபிஸர்களுக்கு மெடல்கள் கொடுத்தார். அவரும்பெல்ஜியத்தின் அரசரும் துருப்புகளைப் பார்வையிட்டார்கள்.

இன்று ஜார்ஜ் அரசர் 39-வது கார்வால் ரைபிள்ஸ் என்னும் ரெஜிமெண்டைச் சேர்ந்த நாய்க் டர்வான் ஸிங்குக்கும், 129-வது பலுசிஸ் ரெஜிமெண்டைச் சேர்ந்த ஒரு சிப்பாய்க்கும் விக்டோரியா க்ராஸ் என்னும் மெடல்கள் கொடுத்தார்.

6-தேதி.

யுத்தத்தைப் பார்ப்பதற்குப் போயிருந்த நமதரசர் லண்டனுக்குத் திரும்பிவிட்டார்.

## ரஷ்யாவுக்கும், ஆஸ்ட்ரியா-ஜெர்மனி இவைகளுக்கும் யுத்தம்.

நவம்பர்மீ 13-தேதி.

ரஷ்யர்கள் ப்ரஸிமிஸல் கோட்டைகளை மறுபடியும் முற்றுகைபோட ஆரம்பித்திருக்கிறார்கள்.

14-தேதி.

ஜெர்மானியர்கள் காலிஸ் என்னுமிடத்தில் ரஷ்யர்களால் தோற்கடிக்கப்பட்டார்கள்.

ஆஸ்ட்ரியர்கள் காலீஷ்யாவில் பின்வாங்கி யோடிக்கொண்டிருக்கிறார்கள்.

16-தேதி.

ப்ளாக் என்னும் இடத்துக்கும் வார்ட்டா நதிக்கும் இடையில் ரஷ்யர்களுக்கும் ஜெர்மானியர்களுக்கும் யுத்தம் நடக்கிறது.

ரஷ்யர்கள் கிழக்கு ப்ரஷ்யாவில் தாங்கள் பிடித்த பட்டணங்களின்மேல் யுத்த அபராதம் போட்டிருக்கிறார்கள்.

17-தேதி.

க்ராக்கோ பட்டணத்தை ரஷ்யர்கள் முற்றுகை போட்டுக்கொண்டிருக்கிறார்க ளென்றும், அந்தப் பட்டணத்தில் ஒரு பாகம் எரிந்துகொண்டிருக்கிறதென்றும் சொல்லப்படுகிறது.

21-தேதி.

க்ராக்கோவுக்கும் ஸென்ஸ்டோசோவாவுக்கும் இடையில் ரஷ்யர்கள் தங்களை எதிர்த்த ஆஸ்ட்ரோ-ஜெர்மன் ஸைன்யங்களைத் தோற்கடித்தார்கள்.

23-தேதி.

லாட்ஸ் என்னுமிடத்தில் யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது. ரஷ்யர்கள் 6000 ஜெர்மானியர்களைக் கைது செய்தார்கள்.

25-தேதி.

ரஷ்யர்கள் 8000 ஆஸ்ட்ரியர்களைக் கைது செய்திருக்கிறார்கள்.

26-தேதி.

ரஷ்யர்கள் ஹங்கேரி ராஜ்யத்துக்குள் போயிருக்கிறார்கள். கார்ப்பேதியன் மலைகளைத் தாண்டிப்போன ரஷ்யத் துருப்புகள் ப்ரெஸோ, லாபோர்க்ஸ் என்னும் இடங்களில் ஒரு ஆஸ்ட்ரிய ஜெனரலையும் 40 ஆபிஸர்களையும், 3500 ஸோல்ஜர்களையும் கைது செய்து அநேக மெஷீன் பீரங்கிகளைப் பிடித்துக்கொண்டன.

ரஷ்யர்கள் கார்ப்பேதியன் மலைக்கணவாயின் பக்கத்திலுள்ள கௌஜெனு என்னும் பட்டணத்தைப் பிடித்திருக்கிறார்கள்.

லாட்ஸ் என்னும் பட்டணத்துக்குப் பக்கத்தில் பிடித்த ஜெர்மானியர்களைக் கொண்டுவருவதற்காக 48-வண்டித் தொடர்கள் போயிருக்கின்றனவாம். இவைகளில் ஒரு 'ஆர்மிகோர்' ஸைன்யம் அதாவது ஸுமார் 35,000 பேர் ஏற்றலாமாம்.

28-தேதி.

ரஷ்யர்கள் ஜெர்மனியின்மேல் படை யெடுப்பார்களோவென்று பயந்து ஜெர்மானியர்கள் மிமல் நதியோரமாய் கோட்டைகள் கட்டிக்கொண்டும், டில்ஸிட் பட்டணத்தைச் சுற்றி அரண்கள் கட்டிக்கொண்டும் இருக்கிறார்களாம்.

29-தேதி.

ரஷ்யர்கள் ஸெர்னெவிட்ஸ் என்னுமிடத்தைப் பிடித்திருக்கிறார்கள்.

டிஸம்பர்மீ 1-தேதி.

லாட்ஸுக்குப் பக்கத்தில் ஜெர்மானியர்களுக்கும் ரஷ்யர்களுக்கும் கொடிய யுத்தம் நடக்கிறது.

ரஷ்யர்கள் நவம்பர்மாஸத்தின் முதல் பாதியில் 50,000 ஆஸ்ட்ரியர்களைக் கைது செய்தார்கள்.

2-தேதி.

லாவிட்ச் என்னும் இடத்தில் யுத்தம் நடந்து வருகிறது. லாட்ஸுக்கு வடக்கே ஜெர்மானியர்கள் ரஷ்யர்களை பலமாய்த் தாக்கியும் கடைசியில் பின்னடைந்துவிட்டார்கள். க்ராக்கோவுக்குத் தெற்கேயுள்ள வெலிட்ச்கோவுக்குள் ரஷ்யர்கள் புகுந்திருக்கிறார்கள்.

ரஷ்யர்கள் ஸெர்ட்ஸாப் என்னும் இடத்தைப் பிடித்திருக்கிறார்கள்.

ஸார் சக்ரவர்த்தி போர்முனைக்குப் போயிருக்கிறார்.

3-தேதி.

ரஷ்யர்கள் வெலிட்ச்கோ என்னும் ஊரிலிருந்து க்ராக்கோ கோட்டைகளைத் தாக்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

இன்று க்ளாவ்னோ—லாவிக்ஸ் ஆகிய இந்த இடங்களுக்கு நடுவிலும், லாட்ஸுக்கும் பியாட்ருகாவ் என்னும் பட்டணத்துக்கும் நடுவிலுள்ள ரோடிலும் யுத்தம் பலமாக நடந்தது.

4-தேதி.

லாவிக்ஸ் ப்ரதேசத்தில் யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது.

ரஷ்யர்கள் கார்ப்பேதியன் மலைகளைத் தாண்டிச் சென்று பார்ட்பீல்ட் என்னும் இடத்தைப் பிடித்திருக்கிறார்கள்.

## ஆஸ்ட்ரோ-ஸெர்விய யுத்தம்.

நவம்பர்மீ 17-தேதி.

ஒரு புதிய ஆஸ்ட்ரிய சைன்யம் ஸெர்வியர்களைத் தோற்கடித்து ஸெர்வியாவிற்குள் புகுந்திருக்கிறது.

20-தேதி.

ஸெர்வியர்கள் வாலியெவொ என்னும் இடத்தை விட்டுவிட்டுப் போய்விட்டார்கள்.

27-தேதி.

ஸெர்வியாவிலுள்ள லாஸரிவாட்ஸ் ப்ரதேசத்தில் ஆஸ்ட்ரியர்களுக்கும் ஸெர்வியர்களுக்கும் யுத்தம் நடக்கிறது. ஆஸ்ட்ரியர்கள் 5-ஆர்மிகோர் சைன்யம் கொண்டுபோயிருக்கிறார்களாம்.

8-ஆஸ்ட்ரிய பட்டாளங்கள் விசிக்ராட் ப்ரதேசத்தில் மாண்டிநிக்ர சைன்யங்களைத் தாக்கின. மாண்டிநிக்ரர்கள் ஆஸ்ட்ரியர்களைத் தோற்கடித்தார்கள்.

டிஸம்பர்மீ 2-தேதி.

ஸெர்வியர்கள் பெல்க்ரேடை விட்டுவிட்டுப் போய்விட்டார்களென்று சொல்லப்படுகிறது.

ஸெர்வியாவிலுள்ள ஸான்வொடார் என்னுமிடத்தில் ஆஸ்ட்ரியர்கள் ஸெர்வியர்களைத் தோற்கடித்தார்கள்.

ஸெர்வியர்கள் லாஸார் இவாட்ஸ் என்னுமிடத்தில் ஆஸ்ட்ரியர்களைத் தோற்கடித்தார்கள்.

டிஸம்பர்மீ 3-தேதி.

ஆஸ்ட்ரியர்கள் பெல்க்ரேடைப் பிடித்திருக்கிறார்கள்.

7-தேதி.

ஸெர்பியர்கள் *ஆஸ்ட்ரியர்களை எல்லா விடங்களிலும் தோற்கடித்து விட்டார்களென்று சொல்லப்படுகிறது. ஸெர்வியர்கள் 2400 ஆஸ்ட்ரியர்களைக் கைதுசெய்திருக்கிறார்களாம்.

* ஸெர்வியா என்னும் பெயரில் முதல் பாகமாகிய 'ஸெர்வ்' என்னும் பதத்துக்கு 'ஊழியம் செய்' என்று அர்த்தமாகையால், அந்த வார்த்தையை உபயோகிக்காமல் அவர்களுடைய ஜாதியின் பெயராகிய 'ஸெர்ப்' என்னும் பதத்தை ஆதாரமாக வைத்து அந்த தேசத்துக்கு ஸெர்பியா என்றும், ஜனங்களுக்கு ஸெர்பியர்கள் என்றும் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

## துருக்கியோடு யுத்தம்.

நவம்பர்மீ 14-தேதி.

டார்டனல்ஸ் ஜலஸந்தியிலுள்ள கோட்டைகளை நேசக் கப்பல்படை தாக்கினபோது 'கோடன்' என்னும் ஜெர்மன் கப்பல் கொஞ்சம் சேதமடைந்ததாம்.

15-தேதி.

ஜெர்மானியர்கள் எர்ஸிரம் பட்டணத்தைச் சுற்றி கோட்டைகள் கட்டிக்கொண்டிருக்கிறார்களாம்.

16-தேதி.

ஆர்மீனியாவில் துருக்கிய சைன்யம் புதிதாக வந்ததால் ரஷ்யர்கள் பின்னுக்கு வாங்கிப் போயிருக்கிறார்கள். துருக்கியர்கள் கானஸ்ஸார் கணவாயைப் பிடிக்க முயன்றும் முடியாமல் போயிற்று.

19-தேதி.

யூப்ரட்டீஸ் பள்ளத்தாக்கிலுள்ள டாடா என்னும் ஊரை ரஷ்யர்கள் பிடித்திருக்கிறார்கள்.

20-தேதி.

ப்ளாக்ஸீ (கருங்கடல்)யிலுள்ள ரஷ்ய கப்பல்படை 'கோபன்', 'ப்ரஸ்லா' என்னும் ஜெர்மன் கப்பல்களைத் தாக்கிற்று. 'கோடன்' ரொம்ப சேதப்பட்டுப்போயிற்றாம். இரண்டு ஜெர்மன் கப்பல்களும் ஓடிவிட்டன.

21-தேதி.

எர்ஸிரமுக்குப் பக்கத்தில் ரஷ்யர்கள் துருக்கியர்களைத் தோற்கடித்தார்கள்.

24-தேதி.

எர்ஸீரம் ப்ரதேசத்தில் ரஷ்யர்கள் துருக்கிய துருப்பு ஒன்றைத் தோற்கடித்தார்கள். காரகிலிஸ்ஸா, அலாஷ்கெர்ட் என்னுமிடங்களிலும் ரஷ்யர்கள் துருக்கியர்களைத் தோற்கடித்தார்கள்.

25-தேதி.

ஆர்மீனியாவில் ரஷ்யர்கள் துருக்கியர்களைத் தோற்கடித்து எர்ஸிரமை நோக்கித் துரத்தியடித்தார்கள்.

துருக்கியைச் சேர்ந்த சைன்யங்களில் "ஆர்மிகோர்" என்னும் பிரிவில் ஒன்றாகிய 11-வது ஆர்மிகோரைச் சேர்ந்த இரண்டு டிவிஷன்களில் நூற்றுக்கு அறுபது பாகம் ஸோல்ஜர்கள் துருக்கி சைன்யத்தை விட்டுவிட்டு ஓடிவிட்டார்களாம். அவர்கள் ரஷ்யர்களுக்கு எதிராக நின்று யுத்தம் செய்ய மறுக்கிறார்களாம்.

27-தேதி.

ஒரு ரஷ்ய துருப்பு யூப்ரடீஸ் பள்ளத்தாக்கில் துருக்கியர்களைத் தோற்கடித்துத் துரத்திற்று.

டிஸம்பர்மீ 6-தேதி.

ரஷ்யர்கள் ஆர்மினியா ப்ரதேசத்திலுள்ள ஸாரய், காஷ்கால் என்னுமிடங்களைப் பிடித்திருக்கிறார்கள்.

7-தேதி.

துருக்கியர்களுக்கு ஸொந்தமான 'ஹமீடியே' என்னும் க்ரூஸர் கடலிலுள்ள வெடிகுண்டுகளில் பட்டு ரொம்ப சேதமடைந்து போய்விட்டதென்று சொல்லப்படுகிறது.

### பொது விஷயங்கள்.

நவம்பர்மீ 13-தேதி.

தென்னாப்பிரிக்காவில் ப்ரிட்டிஷாருக்கு விரோதமாய் கலகம் செய்தவர்களை ஜெனரல் போதா விஜன்பர்க் என்னுமிடத்தில் தோற்கடித்தார்.

14-தேதி.

ப்ரிட்டிஷ் கவர்ன்மெண்டார் பெல்ஜியத்துக்கு $4\frac{1}{2}$ கோடி ரூபாயும், ஸெர்வியாவுக்கு $1\frac{1}{4}$ கோடி ரூபாயும் கடன் கொடுத்திருக்கிறார்கள்.

15-தேதி.

டோவர் ஜலஸந்தியில் இரண்டு ஜெர்மன் ஸப்மரீன் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன.

கயாச்செளவிலுள்ள ட்ஸிங்டோ கோட்டைக்குப் பக்கத்தில் 'கெய்ஸரின்எலிஸபத்' என்னும் ஆஸ்ட்ரிய க்ரூஸர் கப்பல் மூழ்கடிக்கப்பட்டது.

19-தேதி.

இதுவரையில் கப்பல் படையில் 222 ஆபிஸர்கள் கொல்லப்பட்டும், 27-பேர் காயப்பட்டும் போனார்கள். 3455 போர்வீரர்கள் இறந்தும், 428 பேர் காயமடைந்தும் போனார்கள். இவர்களைத் தவிர ஆண்ட்வெர்ப்புக்கு அனுப்பின கப்பல்படை வீரர்களில் 1000 பேர்கள் போனவழி தெரியவில்லையாம். சில்லி தேசத்துக்குப் பக்கத்தில் நடந்த கடல் யுத்தத்தில் 875 பேர் இறந்துபோனார்கள்.

ஜெர்மானிய கப்பல்படை பால்டிக் கடலிலுள்ள லிபா என்னும் ரஷ்ய பட்டணத்தைத் தாக்கிற்று.

22-தேதி.

தென்னாப்பிரிக்காவில் கலகம் அடங்கி வருகிறது. அநேகர் கவர்ன்மெண்டினிடம் சரணடைந்திருக்கிறார்கள்.

24-தேதி.

ஒரு ஜெர்மன் 'டெஸ்ட்ராயர்' கப்பல் டென்மார்க்குச்கு ஸொந்தமான ஒரு ஸ்டீமரின்மேல் மோதி மூழ்கிப் போய்விட்டதாம்.

26-தேதி.

லண்டனுக்கு ஸுமார் 30 மைல் கிழக்கே தெம்ஸ் நதியின் முகத்வாரத்தில் ஷியர்னஸ் என்னும் ஊரில் இருந்த 'புல்வார்க்' என்னும் பெரிய யுத்தக் கப்பலில் வைத்திருந்த மருந்து வெடித்து கப்பல் உடைந்து மூழ்கிப்போயிற்று. ஸுமார் 700 பேர் இறந்தார்கள். 7-பேர் உயிர் தப்பினார்கள்.

பெர்ஷியா தேசம் இந்த யுத்தத்தில் ஒரு கக்ஷியிலும் சேராமலிருப்பதாக அந்த தேசத்து கவர்ன்மெண்டார் விளம்பரம் செய்திருக்கிறார்கள்.

28-தேதி.

ஜப்பான் ரஷ்யாமேல் படையெடுத்தால் ஜெர்மனி ஜப்பானோடு எந்தவிதமான நிபந்தனைகள் சொன்னாலும் அதற்கு உடன்பட்டு ஸமாதானம் செய்துகொள்வதாக ஜெர்மன் சக்ரவர்த்தி ஜப்பான் சக்ரவர்த்திக்குத் தெரிவித்தாராம். அதற்கு ஜப்பான் சக்ரவர்த்தி, ஜெர்மனி உடன்படிக்கைகளை அலக்ஷ்யம் செய்வதுபோல ஜப்பான் உடன்படிக்கைகளை அலக்ஷயம் செய்வதற்கில்லையென்று பதில் தெரிவித்தாராம்.

29-தேதி.

இந்திய ராஜாக்கள் யுத்த உதவிக்காக ஏற்படுத்திக் கொடுத்த 'லாயல்டி' (ராஜவிச்வாஸம்) என்னும் ஹாஸ்பிடல் கப்பல் இன்று பம்பாயை விட்டுப் புறப்பட்டுப் போயிற்று.

ஸமீபத்தில் ப்ரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கும் துருக்கிக்கும் யுத்தம் உண்டாகியிருப்பதைத் தெரிவித்து வைஸ்ராய் அமீருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதற்கு அமீர் துருக்கி யுத்தத்தில் சேர்ந்து கொண்டதைப் பற்றி வருத்தப்படுவதாயும், தாம் இந்த யுத்தத்தில் ஒரு கக்ஷியிலும் சேராமல் தனிமையாயிருப்பதாகவும் பதில் தெரிவித்திருக்கிறார்.

30-தேதி.

பால்டிக் கடலில் உள்ள லிபா என்னும் பட்டணத்துக்குப் பக்கத்தில் ஒரு ஜெர்மானிய க்ரூஸர் மூழ்கடிக்கப்பட்டதென்றும்,ஒரு ஜெர்மன்யுத்தக் கப்பல் கடல் வெடிகுண்டுகளில் பட்டு மூழ்கிப்போயிற்றென்றும் சொல்லப்படுகிறது.

டிஸம்பர்மீ 3-தேதி.

ஒரு ஆகாயக் கப்பல்காரர் எஸ்ஸனிலுள்ள ஜெர்மனிக்கு ஸொந்தமான க்ருப் பீரங்கிச் சாலையில் சில

வெடி குண்டுகள் போட்டாராம். அந்தச் சாலேயில் என்ன சேதம் ஏற்பட்டதென்று தெரியவில்லே. ஆகாய கமனி தமக்கு யாதொரு அபாயமுமில்லாமல் திரும்பிவிட்டாராம்.

கலகம் செய்த போயர்களின் தலைவர்களில் ஒருவ ராகிய டிவெட் என்பவர் கைது செய்யப்பட்டிருக் கிறார்.

4-தேதி.

ஒரு அமெரிக்கர் லார்ட்கிச்சனரைக் கண்டு பேசிய தில் லார்ட் கிட்சனர், யுத்தம் குறைந்தது மூன்று வர்ஷம் நடைபெறுமென்றும், ஜெர்மனி முற்றிலும் தோற்கடிக்கப்பட்டால்தான் யுத்தம் முடிவுபெறுமென் றும் சொன்னாராம்.

இன்று இட்டலியின் ப்ரதமமந்த்ரியாகிய ஸின்யா ஸாலண்ட்ரா என்பவர் சேம்பர் அப் டெபுடீஸ் என் னும் இட்டாலிய பார்லிமெண்ட் ஸபையில் இட்டலி யுத்தத்தில் சேரவில்லே யென்றாலும், பின்னல் ஏதா வது நேர்ந்தாலும் அதற்குத் தயாராக இருக்கவேண்டு மென்றும், அதற்காக ஸைன்யம் முதலியவைகளேத் தயாராக வைத்துக்கொள்ளவேண்டு மென்றும் சொன் ஞர்.

ஜெர்மனியின் கிழக்கு எல்லே நாட்டுக்குப் போயிருந்த கெய்ஸர் பெர்லினுக்குப் போயிருக்கிறார்

5-தேதி.

ரொமானிய இந்த யுத்தத்தில் இங்க்லண்டோடு சேருமென்றும், எந்தத் தேதியில் சேருவதென்பதை ரொமானியர்கள் யோசித்துக்கொண் டிருக்கிறார்க ளென்றும் சொல்லப்படுகிறது.

7-தேதி.

இதுவரை ஜெர்மன் கவர்ன்மெண்டார் வெளியிட் டிருக்கும் ஜாப்தாக்களின்படி, 658483 ஸோல்ஜர்கள் ஜெர்மனிக்கு சேதமாம். இவைகளேத்தவிர ஜெர் மனியின் பாகங்களாகிய வொர்ட்டம்பர்க், ஸாக்ஸனி, பவேரியா ஆகிய இந்த நாட்டு ஸைன்யங்களிலும் ரொம்ப சேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவை களைச் சேர்த்தால் ஜெர்மன் ஸைன்யங்களில் ரொம்ப சேதம் ஏற்பட்டிருப்பதாகத் தெரியும். ஆஸ்ட்ரோ ஜெர்மன் ஸைன்யங்களில் தினந்தோறும் ஸரா ஸரி 20,000 பேர் வீதம் கொல்லப்பட்டும் சாயமடைந் துப் போகிறார்களாம்.

## SEASON.

## கால ஸ்திதி.

### Rainfall.

மழை.—1914ஸு ஏப்ரல்மீ 1வ-யிலிருந்து 1914ஸு டிஸம்பர்மீ 10வ- வரையில் பெய்த மழை யின் அளவும், இந்தக் காலத்தில் ஸராஸரியில் பெய்தி ருக்கவேண்டிய மழையின் அளவும், கீழே அங்குலம் ஸெண்டுகளாகக் குறிக்கப்பட்டிருக்கின்றன.

| மழை பெய்த ஊரின் பெயர். | பெய்த மழை அங்குலம். | பெய்திருக்க வேண்டிய மழை அங்குலம். |
|---|---|---|
| சோபால்பூர் | 53·59 | 43·01 |
| வால்டேர் | 39·48 | 35·03 |
| காக்கிநாடா | 29·95 | 37·33 |
| மஸூலிப்பட்டணம் | 29·63 | 38·63 |
| நெல்லூர் | 32·75 | 31·25 |
| மதராஸ் | 55·57 | 44·27 |
| கூடலூர் | 72·25 | 44·16 |
| நாகப்பட்டணம் | 52·01 | 43·42 |
| பாம்பன் | 39·68 | 29·51 |
| கொழும்பு | 67·35 | 70·90 |
| திருவனந்தபுரம் | 60·92 | 59·17 |
| கொச்சி | 110·40 | 119·35 |
| கள்ளிக்கோட்டை | 120·46 | 115·06 |
| மங்களூர் | 147·43 | 126·55 |
| மெர்க்காரா | 128·14 | 125·25 |
| ஐதராபாத் | 41·73 | 30·09 |
| பல்லாரி | 18·97 | 19·59 |
| கர்நூல் | 26·08 | 26·17 |
| கடப்பை | 25·87 | 30·34 |
| ஹாஸ்ஸான் | 29·62 | 34·97 |
| பெங்களூர் | 28·80 | 34·29 |
| கொடைக்கானல் | 74·66 | 52·54 |
| உதகமண்டலம் | 46·83 | 51·56 |
| கோயம்புத்தூர் | 15·71 | 19·95 |
| வேலூர் | 35·75 | 41·06 |
| சேலம் | 35·98 | 33·15 |
| திருச்சிராப்பள்ளி | 20·00 | 29·28 |
| புதுக்கோட்டை | 36·97 | 30·69 |
| மதுரை | 26·98 | 31·53 |
| திருநெல்வேலி | 47·23 | 21·68 |

# Calendar—பஞ்சாங்கம்.

| அம்ருதாதி | லக்ன பாக்கி | | அகர் மாந | துலு | இங் | தமி | வாரம் | 48-அனந்த வருஷ மார்கழிமீ தக்ஷிணயனம்-ஹேமந்தருது { பார்கசிரம் புஷ்யம் } கொல்லம்-1090 பஸலி-1324 { இங்கிலீஷ்-1914-15 டிசம்பர்-ஜனவரிமீ } ஹிஜரி-1333 மொஹரம்-ஸபர் |
|---|---|---|---|---|---|---|---|---|
| யோக | நா | வி | நா வி | உ | உ | உ | | |
| மசி | 5 | 23 | 2826 | 26 | 15 | 1 | செ | த்ர-21-8,விசா-10-9,சுக-10-31,பத்-46-47,தி-19-1,சாபரவி-16-9,விருச்சிகத்ரயோதசீதி, (குதபவ்யாப்தியம்,தன் [மாஸஸம்பந்தமும், இருப்பதால்.)கிருஷ்ணங்காரகசதுர்த்தசி, சாந்திரதிதிதுவயம், ஷடசீதிபுண்யகாலமாஸ |
| அசிம | | 12 | 26 | 27 | 16 | 2 | பு | சசி-12-26, அனு-3-18,உப-53-24,திரு 0-18,உப-49-59,சது-38-11,தி-15-43,ஸர்வஅமா,(ரங் [சிவரா,விருத்யர். [கூனில்சாபசாந்திரசதுர்த்தசீதிதியுமின்றுதான்) |
| சி | | 1 | 25 | 28 | 17 | 3 | வி | ● 4-3,உப 52-25,மூல-50-47,கண்-40-45,கிம்-30-8,தி-14-37,ரா-18-46,பௌஷசுத்த,இஷ்டி,பிண்டபிதிரு, |
| பிசி | 4 | 56 | 25 | 29 | 18 | 4 | வெ | த்வி-50-4,பூரா-46-1,விரு-32-9,பால-23-5,தி-12-42,சந்திரதர்சன,சாக்கியநாயனுர் [அவம, புஷ்களா |
| சி | | 39 | 25 | 1 | 19 தனுர்மீ | 5 | ச | த்ரி-45-15,உரா-42-47,துரு-24-37,தை-17-25,தி-4-44,ரா-24-3 |
| அம | தனுஸ் | 28 | 25 | 2 | 20 | 6 | ஞா | சது-42-22,தி-41-27,வியா-18-36,வணி-13-33,ரா-23-2,சிரவணஉப,சதுர்தீவிரு,கரிநா. |
| சி | | 18 | 24 | 3 | 21 | 7 | தி | பஞ்-41-36,அவி-42-10,ஹர்-14-13,பவ-11-43 |
| ம | | 7 | 24 | 4 | 22 | 8 | செ | ஷஷ்-42-57,சத-45-0,வஜ்-11-29,சவு-12-1,தி-0-56,மகராயன-38-19,ஷஷ்டியுப, |
| அசி | 3 | 56 | 24 | 5 | 23 | 9 | பு | ஸப்-46-15,பூட்-49-33,வித்-10-20,கர-14-22,தி-2-2,மஹாவ்யதீபாதம்,சரிநான். |
| சி | | 45 | 24 | டிஸம்பர்மீ 6 | 24 | 10 | வி | அஷ்-51-8,உட்-55-3,விய-10-31,பத்-18-31,தி-15-50.இராமா |
| அ | | 34 | 25 | 7 | 25 | 11 | வெ | நவ-57-5,ரே-60-0,வரீ-11-46,பால-24-0,ரா-0-42,திவாமா,கரிநாள்,வாயிலார்நாய |
| பிசி | | 23 | 25 | 8 | 26 | 12 | ச | தச-60-0,ரே-2-42,பரி-13-40,தை-30-16,ரா-30-34,த்ரிதினஸ்பிருக் |
| சிபி | | 12 | 25 | 9 | 27 | 13 | ஞா | தச-3-30,அசு-10-12,சிவ-15-49,வணி-36-45,சே-2-57,ரா-8-50,மன்வாதி |
| சிம | | 2 | 25 | 10 | 28 | 14 | தி | ஏகா-9-55,பர-17-37,சித்-17-54,பவ-42-57,ரா-22-46,ஸர்வவைகுண்டஏகா,கிருத்திகை,கற்போட்டாரம்ப |
| சிஅ | 2 | 51 | 25 | 11 | 29 | 15 | செ | த்வா-15-49,கிரு-24-31,சாத்-19-34,கவு-48-40,த்ரயோதசீதி,ப்ரதோஷம்,(ரங்கூன்அதிதி) [21-15. |
| சி | | 40 | 26 | 12 | 30 | 16 | பு | த்ர-20-56,ரோ-30-38,சுப-20-38,கர-53-8,தி-8-41,ரா-17-32,அதிதி,(ரங்கூன்த்ரயோதசீதி) |
| ம | | 29 | 26 | 13 | 31 | 17 | வி | சசி-24-45,மிரு-35-30,சுப்-20-40,பத்-56-27,ரா-29-56,சதுர்த்தசீதி,ஆர்த்ராபிஷேகம். |
| சி | | 18 | 26 | 14 | 1 | 18 | வெ | ○-28-10,திரு-39-59,பிரா-20-32,பால-59-20,சே-2-22,ஆர்த்ராதர்சனம்,சடையநாய, |
| சி | | 7 | 26 | 15 | 2 | 19 | ச | ப்ர-30-16,புன-43-14,மா-19-20,கவு-30-16,தி-11-43,வைசிரா, பௌஷபகுள,இஷ்டி |
| சி | 1 | 56 | 27 | 16 | 3 | 20 | ஞா | த்வி-31-21,பூச-45-32,வை-17-22,தை-0-56,தி-4-3 |
| சிம | | 45 | 27 | 17 1915ஸு ஜனவரிமீ | 4 | 21 | தி | த்ரி-31-28,ஆயி-46-50,விஷ்-14-38,வணி-1-31,தி-18-20,சங்கடசதுர்த்தீ |
| சி | | 35 | 28 | 18 | 5 | 22 | செ | சது 30-37,மக-47-15,பிரீ-11-10,பவ-1-9,கவு-59-51,தி-17-8,பௌமசதுர்த்தீ |
| அ | | 24 | 28 | 19 | 6 | 23 | பு | பஞ்-28-51,பூர-46-45,ஆயு-6-59,கர-57-37,தி-7-11 |
| மசி | | 13 | 29 | 20 | 7 | 24 | வி | ஷஷ்-26-9,உத்-45-20,ஸவு-2-4,உப-54-20,பத்-54-26,தி-4-25,இயற்பகைநாய |
| அசி | | 2 | 29 | 21 | 8 | 25 | வெ | ஸப்-22-27,ஹஸ்-42-58,அதி-49-58,பால-50-16,தி-5-36,ஸப்தமீதி,அப-அந்தம்,22-47,காலாஷ்டமீ |
| மஅ | 0 | 51 | 30 | 22 | 9 | 26 | ச | அஷ்-17-51,சித்-39-43,சுக-46-50,தை-45-23,தி-1-59,ரா-24-21,திதிதுவய,அப-ஆதி-17-6,அஷ்டகா |
| சிஉ | | 40 | 31 | 23 | 10 | 27 | ஞா | நவ-12-23,சுவா-35-40,திரு-35-2,வணி-39-23,ரா-20-8,கற்போட்டமுடிவு-26-9,மானக்கஞ்சாரர் |
| மசி | | 29 | 31 | 24 | 11 | 28 | தி | தச-6-12,உப-53-21,விசா-31-0,சூல-26-44,பவ-32-55,ரா-11-40,ஸ்மார்த்தஏகா,அவம,இராமா |
| சிஉ | | 10 | 32 | 25 | 12 | 29 | செ | த்வா-52-40,அனு-25-58,கண்-18-8,கவு-26-7,ரா-10-15,வைஷ்ணவஏகா,திவாமா,(ரங்கூன் அவம) |
| சிம | 0 | 8 | 32 | 26 | 13 | 30 | புத | த்ர-45-52, கேட்-20-51,விரு-9-25,கர-19-14,ரா-10-45,மகரரவி-42-21,சாபத்ரயோதசீதி,ப்ரதோஷம்,சிசிதாந்தம் 45-19,போகிப்பண்டிகை. |

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| ரா | 9-தனு-பு<br>19-கும்-கு<br>28-மக-பு | | |
| குரு | | | கே |
| ர-செ | பு<br>சு | | |